

சிங்கமதாயவுணன் திறலாகமுன்கீண்டுகந்த
சங்கமிடத்தானைத் தழலாழிவலத்தானை
செங்கமலத் தயனனையார் தென்னழுந்தையில் மன்னிநின்ற
அங்கமலக்கண்ணனை அடியேன்கண்டு கொண்டேனே.

முன்னொருகால், நரஸிம்ஹ ரூபியாய்க்கொண்டு இரணியாசுரனுடைய வலிமிக்க மார்வை இருபிளவாக்கித் திருவுள்ளமுவந்தவனும் சங்கை இடத்திருக்கையிலுடையவனும் தீக்ஷ்ணமான திருவாழியை வலத்திருக்கையிலுடையவனும் செவ்விய (திருநாபிக்) கமலத்திற் பிறந்த பிரமனைப் போன்ற பிராமணர்கள் (வாழ்கிற) அழகிய திருவழுந்தூரிலே நித்யவாஸம் செய்பவனும் அழகிய தாமரை மலர் போன்ற திருக்கண்களையுடையனுமான ஆமருவியப்பனை அடியேன் ஸேவிக்கப் பெற்றேன்.

*பெரிய திருமொழி 7-6-1.*

ஏப்ரல் - 1988

தனிப்பிரதி ரூ. 1 மலர் 18

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 11

# உள்ளுறை

பக்கம்



## அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ தசபுஜ உக்கிர நரசிம்மசுவாமி. (சந்திரகிரி கோட்டையில் உள்ள சிற்பத்தினை ஓவியமாக வரைந்தவர் திரு. உதயகிரி.

2-வது : அண்மையில் திருப்பதியில் நடைபெற்ற ஸ்ரீ அன்னமாச்சார்யா நினைவு நாள் விழாவின் துவக்க மற்றும் பிரிவு வாழ்த்துரை விழா நிகழ்ச்சிகள்.

3-வது ஸ்ரீ அன்னமாச்சார்யா நினைவு நாள் விழாவில் நடைபெற்ற இன்னிசைக் கச்சேரி நிகழ்ச்சிகள்.

சிறப்பாசிரியர்

திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்

திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்

திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:

திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

ஒருவன் துன்பத்தின் எல்லையைத் தொட்டுத் துடிக்கும்போது, எதிர்பார்க்காது அவனுக்கு உதவிடும் கரமோ, கருவியோ கடவுளாக அமைகின்றது. இவ்வாறு கண்ணுக்குத் தெரிந்தும், தெரியாமலும் அவனுக்கும், அவன் சமுதாயத்திற்கும் உதவிடும் சக்தியின் பெருமைகளையே அக்கடவுளின் லீலைகளாக எண்ணுகின்றான். இவ்லீலைகளை புரிந்திட அச்சக்தியும் பல உருவங்களில் வெளிப்படுகின்றது. இவற்றினை அவதாரங்கள் என்று போற்றுகின்றனர் மக்கள். இவ்வவதார உண்மையினைத்தான் கீதையிலும் கண்ணன் 'தீயவர்களை அழித்து தர்மத்தைக் காப்பாற்ற இம்மண்ணில் அவதாரம் செய்கின்றேன்' என்று தன் வாக்காலேயே உறுதிப்படுத்துகின்றான்.

நாளும் பிரச்சனைகளால் சூழப்பட்டிருக்கும் இன்றைய மனிதன் மனிதனாக இருப்பதற்கே பக்தி இன்று ஒரு பெருந்துணையாக விளங்குகின்றது. பக்தன் என்றால்—இறை நம்பிக்கையுடையவன் என்றால் நாளும் கோயிலுக்குச் சென்று நாத்தழும்ப ஸ்தோத்திரம் புரிந்து, நெற்றியில் திருமண்ணோ திருநீறோ இடுதல் ஆகியன மட்டுமே போதும் என்பதாகாது. அன்பு, தியாகம், கருணை, நேர்மை,உழைப்பு ஆகிய மனித வாழ்க்கைப் பண்பு நலன்களைத் தன்னகத்தே கொண்டு, அவை பிறரிடம் வளரவும் துணை செய்யும் ஒருவனையே பக்தனாக இந்துமதம் அழைக்கின்றது. இத்தகு பண்புக் கூறுகளுக்கு ஊறு வந்திடும்போது, அவனையும், அவன் வாழும் சமுதாயத்தையும் காப்பாற்றிடும் வகையில் நேரிடையாகவோ, மறைமுகமாகவோ இம்மண்ணில் அம்மாயவன் வேடங்கள் புனைகின்றான். இதுபோது அவ்வேடங்கள் வந்து போகுவனவாகவும், இருந்து செல்பனவாகவும் அமையும். ஆம், தன்னுடைய உயர்ந்த இடத்திலிருந்து பக்தனுக்காக கீழிறங்கி, அவன் தோளோடு தோள் சேர்ந்து, அவனுள் உறையும் இறைமைப் பண்புகளுக்கு உரமாக அமைந்திடும் வகையில் மனித வாழ்க்கையில் அவனுக்கு நம்பிக்கையூட்டும் வகையில், அவன் பிரச்சனைகளைத் தான் முன் நின்று தீர்க்க வருகின்றான். இதுதான் அவன் அவதார ரகஸ்யமாகும்.

இம்மண்ணில் அப்பாற்கடல் நாயகன் புரிந்திட்ட அவதாரங்கள் பலவாயினும், சிறப்புறப் பேசப் பெறுவது அவனுடைய தசாவதாரங்களாகும். வாழ்க்கைப் பரிணாம வளர்ச்சியின் அடிப்படையில் புரிந்திட்ட அவ்வவதாரங்கள், விஞ்ஞானமே வியக்கும் மெய்ஞானப் பெருமையைப் பேசும் ரகஸ்யங்களாகும். பூர்ணாவதாரங்களான இராமகிருஷ்ணாவதாரங்கள் விடுத்து, மற்றைய அவதாரங்கள் மாதவனின் அம்சாவதாரங்களாகக் கூறப்பெறும்.

கடலில் மூழ்கி வேதத்தைக் காப்பாற்ற இறைவன் எடுத்த மச்சாவதாரத்தின்மூலம் மனிதன் சம்சாரக் கடலிலேயே மூழ்கிக் கொண்டு, அற்ப ஆசைகளிலேயே உழன்று குறிக்கோள் ஏதுமின்றி இருக்கும் மனிதனை அறிவுறுத்தியும், அடுத்து எடுத்த நீரிலும் நிலத்திலும் வாழும் கூர்மாவதாரத்தின்மூலம் சற்றே நிலமெனும் சிந்தனை உலகில் நுழைந்தால் தியாகம், பொறுமை, வெற்றி போன்ற பண்புகளின் பெற்றிமையை உணர்ந்து அனுபவிக்க முடியும் என்பதையும், ஐம்புலன் அடக்கத்தின் பெருமையினையும் விளக்கியும், அடுத்து நிலத்தில் மட்டுமே வாழும் வராக அவதாரத்தின் மூலம் இறைவன் படைப்பில் எவ்வுயிரும் அற்பமானது அல்ல என்பதையும், அதே நேரத்து சிற்றின்பங்களிலேயே உழன்று, சிந்தனையேதுமின்றி வாழ்தல் வீணே என்பதையும் உணர்த்தவேயாம்.

அடுத்த எடுத்த நரசிம்மாவதாரமே பின்னர் வரும் மற்றைய அவதாரங்களுக்கு ஒரு முன்னோடியாகும் என்று கூறலாம். பின்னர் நிகழும் அவதார காலங்களில் நிலவிய மனிதனின் அறிவுக் கூர்மை, அரசியல் பொருளாதார அணுகுமுறைகள் மற்றும் குறுகிய மனப்பான்மை, பேராசை போன்ற நிறைகுறை பண்புகளுக்குக் கட்டியம் கூறுவதுபோல் இவ்வவதார நிகழ்ச்சிகள் அமைந்துள்ளன.

தர்மம் அதர்மத்தால் அலை கழிக்கப்படும்போது, அதர்மத்தின் உச்சநிலையில், தர்மத்தின் தீவிரம், வீர்யம் காட்டப்பட்டு,அதன்மூலம் அடுத்துவரும் யுகங்களில் தலையெடுக்கும் தீய சக்திகளுக்கு ஒரு எச்சரிக்கையாக விளங்குகிறான் அப்பிரதோஷ நாயகன். உலக ஆசைகளில் அமிழ்ந்து, தேவைகளைப் பெருக்கிக் கொண்டு வாழும் மனிதனின் இறுதிப் புகலிடம் மரணமே. இவ்வுலகில் விட்டுச் செல்வது பல, எடுத்துச் செல்வது ஒன்றுமில்லை. அக்காலன் நம் உடற்கதவைத் த்ட்டிடும் முன்னர், மனிதனாக வாழக்கற்றுக் கொள்வோம்.மரணத்தைச் சஞ்சலமின்றி, சலனமின்றி ஏற்றுக் கொள்வதே பிறவியின் நியதி. ஹிரண்ய கசிபுவின் கொலை முயற்சிகளிலிருந்து பிரகலாதனைக் காப்பாற்றிய போதெல்லாம், பரமன் தன் அவதாரத்தைக் காட்டவில்லை. ஆனால், மரணம் தன்னைப் பல நிலைகளிலும் நெருங்காவண்ணம் வரம் கோரியிருந்த இரண்யகசிபு நரஹரிரூபனின் 'மடியில் பெற்ற இறுதி முடிவு, பிறவியின் நிலையாமையை மட்டுமன்றி, 'அஜாய மானோ பஹுதா விஜாயதே' என்றபடி பிறப்பில்லாத அவன், கர்ம வசத்தால் பிறந்த நரனின் மேன்மைக்காக, கருணை காரணமாக சிங்கமாக உருவெடுத்து மிருக உணர்வுகளை மனித புத்தியால் வெல்லுதல் எளிது என்பதையும் விளக்கத்தான். சிங்கத்திற்கே உரிய வீர்யம், தைர்யம், அமைதி ஆகியன மனிதனிடமும் இருந்து அவை பொருளுடன் விளங்க வேண்டுமாயின், அவனது நெஞ்சம் கருணை, உறுதி எனும் பண்புகளைப் பெற்றிருத்தல் வேண்டும். அதனால்தான் அவ்வுருவத்தைத் தாங்கினானோ அப்பரமன்!

இந்நரசிம்மாவதாரத்தைச் சற்றே சிந்தித்துப் பார்த்தால் ஒருண்மையும் புலப்படும். இயற்கையைப் பல உருவங்களில் வழிபட்ட மனிதனின் பிற்கால கோயில் வழிபாட்டிற்கு இவ்வவதாரம் அடிகோலியதோ என எண்ணத் தோன்றுகின்றது. மேலும் இவ்வவதாரம் நடந்த இடம், இறைவன் கொண்ட கோலம் யாவும் கோயில் ஆகம விதிகளுக்கு இலக்கணம் வகுத்ததோ என்று கருதவும் வழி வகுக்கின்றது. ஆழ்வார்களாலும், அடியார்களாலும் பலவாறு புகழ்ந்தேற்றப்பட்ட அவ்வேதாந்த விழுப்பொருளாக விளங்கிடும் 'சிரித்த செங்கட்சீய'த்தின் மாண்பினை இம்மாநிலத்தார் உணர்வார்களாயின், அதுவே அவர்களிடையே மறப்பண்புகள் மடிய அறப்பண்புகள் மலர வழி வகுக்கும்.

# செய்திச் சுருக்கம்

**நினைவு நாள் விழா:**

ஸ்ரீ அன்னமாச்சார்யா 485-வது நினைவு நாள் விழா 15-3-88 முதல் 21-3-88 வரை மிகச் சிறப்பாக திருப்பதியில் ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் தி. தி. தேவஸ் தானத்தாரின் 'ஸ்ரீ அன்னமாச்சார்யா திட்டத்துறை'யின் ஆதரவில் நடைபெற்றது. 15-3-88 அன்று நடைபெற்ற துவக்க விழா நிகழ்ச்சிகளுக்குத் தி. தி. தே. செயலாட்சித் தலைவர் திரு. சி.எச். வெங்கடபதி ராஜு அவர்கள் தலைவராகவும், திருப்பதி ஸ்ரீபத்மாவதி மகளிர்ப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் திருமதி. டாக்டர். கோலா ராஜ்யலட்சுமி அவர்கள் சிறப்பு விருந்தினராகவும் பங்கேற்றனர். விழாவுக்கு வருகை புரிந்தோரை தி.தி.தே. பாதுகாப்பு அலுவலர் திரு. எஸ். கே. ஜெய சந்திரா அவர்கள் வரவேற்க, அன்னமாச்சார்யா திட்டத்துறைத் தலைவர் டாக்டர். எம். மோகன் அவர்கள் ஆண்டறிக்கை வாசித்தார். விழா நடைபெற்ற இந்த ஏழு நாட்களின் காலை வேளைகளில் பல்வேறு அறிஞர் பெரு மக்கள் கலந்து கொண்ட இலக்கிய உரைக்கோவை நிகழ்ச்சிகளும், மாலை நேரங்களில் திருவாளர்கள் பி. சூர்யராவ், எம். வி. ரமணமூர்த்தி, ஜி. பாலகிருஷ்ண பிரஸாத், ஆர். ராமனுதன் மற்றும் திருமதியாளர்கள் டி. வேதவதி பிரபாகரராவ், டி. ஜெயா பசுபதி, ஆர். ஜி. ஷோபா ராஜு மற்றும் பலரும் பங்கேற்ற இசைக் கச்சேரி நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. இறுதி நாளன்று, ஆந்திர மாநில அறநிலையத்துறை ஆணையர். திரு. ஜே. பாபுரெட்டி அவர்கள் சிறப்பு விருந்தினராக பங்கேற்றார். பின்னர் ஓலேட்டி வெங்கடேஸ்வரலு, திருமதி. வாணி ஜெயராம் பாடிய தி.தி.தே. ஒலி நாடாக்களை தி.தி.தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர் திரு. ஐ. எல். என். சாஸ்திரி அவர்கள் வெளியிட்டார்.

ஃ ஃ ஃ

திருப்பதியிலிருந்து சுமார் 8 கி.மீ. தூரத்தில் உள்ள ஸ்ரீநிவாசா மங்காபுரத்திலுள்ள தி. தி. தேவஸ்தான கோயிலான ஸ்ரீ வெங்கடேஸ்வர சுவாமி கோயிலில் ரூ. 5/-க்கு அனுமதிக்கும்படியான சிறப்பு நுழைவு தரிசன சீட்டு முறை அண்மையில் அமுலாக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

பாகவத இலக்கியத்தைத் தொகுக்கும் வகையில் அதற்கெனத் தனியாக 'பாகவதத் திட்டம்' எனும் ஒரு துறையை தி. தி. தே. செயற்படுத்தி வந்துள்ளது. தற்போது அத்துறையில் தலைவராக திரு. என். சி. என். நரசிம்மாசார்யா அவர்கள் மேலாண்மையால் நியமனஞ் செய்யப்பட்டுள்ளார். இரண்டு ஆண்டு ஒப்பந்த முறையில் பதவி ஏற்கும் அவர்களுக்கு ரூ. 30,000 சிறப்புதியமாக அளிக்கப்படும். சுமார் ரூ. 42,000 செலவில் இத்திட்டம் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

ஃ ஃ

பள்ளி செல்லும் சிறுர்கள் பயன் பெறும் வகையில் இலவச பல்சிகிச்சை முகாம் ஒன்று ரூ. 10,000 செலவில் தி. தி. தே. ஆதரவில் திருப்பதியில் செயற்பட உள்ளது. இவ்சிகிச்சை முகாம் ஹைதராபாத் பல் மருத்துவக் கல்லூரியின் கூடுதல் பேராசிரியர் டாக்டர். ஏ. எஸ். நாராயணு அவர்களின் தலைமையில் செயற்பட உள்ளது.

ஃ ஃ ஃ

திருமலைக் கோயிலில் உள்ள கண்ணுடி அரங்கில் (ஐநமஹால்) நாளும் உற்சவமூர்த்திகளுக்கு ஊஞ்சல் சேவை நடைபெறும். ரூ. 750/- செலுத்தி பக்தர்கள் பங்கேற்கும் இவ் ஊஞ்சல் சேவை, கண்ணுடி அரங்கு பழுதுபார்க்கப்பட்டு வந்ததால், சிறிது காலமாக நடைபெறவில்லை. தற்போது இக்கண்ணுடி அரங்கில் பழுதடைந்த கண்ணுடிகள் அகற்றப்பட்டு, புதிய வேலைப்பாடுகள் மிகுந்த கண்ணுடிகள் பொருத்தப்பட்டன. ரூ. 5 இலட்சம் செலவில் மேற்கொள்ளப்பட்ட இப்பணியைச் சென்னையைச் சேர்ந்த குளோப் நிறுவனத்தார் இலவசமாக அண்மையில் செய்து முடித்தனர். அவர்கள் மேற்கொண்ட இத்திருத்தொண்டினைப் பாராட்டும் வகையில், அந்நிறுவனத்தின் பங்குதாரர்களான திருவாளர்கள். எம். கே. சுதர்ஸனம், தேவராஜன் ஆகியோரை 5 கிராம் எடையுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா தங்கப் பதக்கங்கள் அளித்து (தலா) கௌரவிப்பதென்று தி. தி. மேலாண்மை முடிவு செய்துள்ளது.

ஃ ஃ ஃ

ஆந்திர மாநிலத்தில் வரங்கலில் தி. தி. தேவஸ்தானம், பார்வையற்ருேர்பள்ளி ஒன்றினைத் திறப்பதென்று முடிவு செய்துள்ளது. இப்பள்ளிக்கென ஆண்டொன்றுக்கு தி. தி. தேவஸ்தானத்திற்கு ரூ. 2 இலட்சம் செலவு ஆகும் என்று எதிர்பார்க்கப் படுகின்றது. இப்பள்ளிக்கானக் கட்டிடத்திற்காகும் செலவில் தன் பங்காக பாதி தொகையாக ரூ. 7 இலட்சம் தி. தி. தே. வழங்கும். மீதித் தொகை ஆந்திர அரசு ஏற்கும்.

ஃ ஃ ஃ

திருப்பதியில் சித்தூர் சாலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி கட்டிடத்தின் மேல் முதல்தளம் ஒன்றினைக் கட்ட ரூ. 17.50 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வரசுவாமி கோயிலில் இலவச நுழைவு அனுமதி முறை ஒழிக்கப்பட்டதால் ரூ. 25/- சிறப்பு நுழைவு சீட்டுக்களின் விற்பனை அதிகமாகியுள்ளது. 1987-88 ஆம் ஆண்டில் ரூ. 4.72 கோடிக்கு இவ் நுழைவு சீட்டுக்கள் விற்பனையாகியுள்ளன. 1988-89 ஆம் ஆண்டில் இவ்விற்பனைத் தொகை ரூ. 5.91 கோடியாக உயரும் என எதிர்பார்க்கப்படுகிறது.

ஃ ஃ ஃ

திருப்பதி ஸ்ரீசின்மயா மிஷன் ஆதரவில் திருப்பதியில் ஒரு வாரத்திற்கு கீதையின் 9வது அத்தியாயத்தின்மீது தொடர் சொற்பொழிவு நிகழ்ச்சி சுவாமி சின்மயானந்தா அவர்களால் அண்மையில் நடைபெற்றது.

ஃ ஃ ஃ

புகழ்பெற்ற இசைத்துறை வல்லுநரும், இசை மேதையுமான டாக்டர். எஸ். ராமனுதன் அவர்கள் அண்மையில் சென்னையில் காலமானர். இந்தியா மட்டுமன்றி உலக அளவிலும் பல விருதுகள் பெற்று, இசைத் துறைக்கு மாபெரும் திருத்தொண்டு செய்து, இறுதி வரை எளிமை வாழ்க்கையுடன் நிறைகுடமாக வாழ்ந்து இயற்கை யெய்திய அவருடைய ஆன்மா சாந்தி அடைய அவ்வேழுமலையானை இறைஞ்சுகின்றோம். ஆ-ர்.



# ஸ்ரீ ராமாநுசர்

சமயங்கள் பல. நம் நாட்டில் நிலவும் சமயங்களுள் சைவமும், வைணவமும் இரு கண்களைப் போன்றவை. வளமார்ந்த வைணவ சமயத்தை உலகுக்கு விளக்கிப் பரவச் செய்த முதன்மைக்குரியவர் ஸ்ரீ ராமாநுசரே! அவரைப் பற்றி ஒரு சிறிது அறிதல் நலம் தரும்.

சென்னைக்கு அருகே ஸ்ரீ பெரும்புதூர் என்றொரு திருத்தலம் உள்ளது. அங்கே ஆசூரி கேசவப்பெருமாள் என்னும் பெயருடைய வைணவ அந்தணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவருடைய துணைவியார் திருப்பெயர் பூமிப் பிராட்டியார் என்பதாம். இவர்கள் செய்த பெருந்தவத்தால் இவர்களுக்கு ஆண்மகவு ஒன்று வாய்த்தது. அம்மகவே ஸ்ரீ ராமாநுசர்.

சுமார் ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் அவதாரம் செய்த ஸ்ரீ ராமாநுசர்தான் வைணவ ஆச்சார்ய திலகமாகத் திகழ்கிறார். வைணவ ஆச்சார்யருள் முதல்வராக ஸ்ரீமந்நாத முனிகள் கொண்டாடப்பட்டாலும் உலகத்தார் உள்ளத்துள் ஒளி விளக்காய்த் திகழ்பவர் ஸ்ரீராமாநுசரே. விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை உலகுக்கு அளித்த பெருமை இவரையே சாரும்.

பெரிய திருமலைநம்பி தன் உடன் பிறந்தாளான பூமிப் பிராட்டியின் ஆண்மகவினுடைய முகவொளியைக் கண்டு உள்ளம் பூரித்தார். அக்குழந்தைக்கு ஸ்ரீராமாநுசன் (இளையாழ்வான்) என்னும் திருநாமம் சூட்டி மகிழ்ந்தார். தக்க பருவத்தில் உபநயனம் செய்விக்கப்பட்டது; கல்விப் பயிற்சியும் கொடுக்கப்பட்டு வந்தது.

இயல், இசை, நாடகம் எனப்படும் முத்தமிழிலும், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் எனப்படும் வேதங்கள் நான்கிலும் ஸ்ரீ ராமாநுசர் சிறந்த தேர்ச்சியைப் பெற்று வரலானார். உரியகாலத்தில் இவருக்குத் திருமணமும் சிறப்புற நடைபெற்றது.

அக்காலத்தில், காஞ்சிபுரத்துக் கருகிலுள்ள திருப்புட்குழி என்னும் திருத்தலத்தில் யாதவப்ரகாசர் என்னும் பெயருடைய சந்நியாசி ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஏக தண்டி.

ஸ்ரீ ராமாநுசர் ஸ்ரீபெரும்புதூரிலிருந்தும் புறப்பட்டுத் திருப்புட்குழி வந்தடைந்தார். யாதவப்ரகாசரிடம் வேதாந்தம் பயின்றார். அப்போது

---

**மாருதிதாசன் — காஞ்சீபுரம்.**

---

மழலை மங்கலத்திலிருந்து கோவிந்த பட்டர் என்பாரும் வந்து யாதவப்ரகாசரிடம் வேதாந்தம் பயின்றார். ஸ்ரீராமாநுசரின் சிறிய தாயாரின் திருக்குமாரர் கோவிந்தபட்டர். எனவே, ராமாநுசரும் கோவிந்தப் பட்டரும் அண்ணன் தம்பிகளாவர்.

யாதவ ப்ரகாசர் வேதாந்த வாக்கியங்களுக்குப் பொருந்தாத உரைகளைக் கூறி வந்தார். பாடம் கேட்டு வந்த ராமாநுசர் தவறான பொருள்களை ஆசிரியர் கூறும் போதெல்லாம் மறுத்துச் சரியான விளக்கம் சொல்லலானார். இதனால் கோபம் கொண்ட யாதவப்ரகாசர் அவரைக் கடிந்து கூறித் தன்னிடமிருந்தும் விலகிச்செல்லுமாறு கூறிவிட்டார்.

ஸ்ரீராமாநுசரின் நுண்ணறிவைக் கண்ட யாதவப்ரகாசர் வஞ்சனையான திட்டத்தால் ராமாநுசரைக் கொல்லத்துணிந்தார். எனவே, இராமாநுசரைத் தம்மிடம் மீண்டு வந்துபாடம் பயிலுமாறுச் சொல்லியனுப்பினார். தம் திட்டப்படித் திருப்புட் குழியிலி

ருந்தும் கங்கை செல்ல எண்ணியிருப்பதை எடுத்துக் கூறினர். ராமாநுசரும் மற்ற சீடர்களும் உடன் வர யாதவப்ரகாசர் பயணத்தைத் தொடங்கினர். இந்த யாத்திரையின் உள்நோக்கத்தைப் புரிந்து கொண்ட கோவிந்தர் ராமாநுசருக்கு இச்சதியை எடுத்துக் கூறி அவரை நீங்கிச் செல்லுமாறு உணர்த்தினர். இதன்படி ஸ்ரீராமாநுசரும் யாதவப்ரகாசரிடமிருந்துத் தப்பித் தனியாகக் காட்டு வழியே சென்று கொண்டிருந்தார்.

திக்குத் தெரியாத காட்டில் செல்லும் வகையறியாது ராமாநுசர் திகைத்து நின்றார். அப்போது பெருமாள் வில்லியின் வடிவந்தாங்கி வாளும் வில்லும் கொண்டு இலக்குமியுடனே அவர் முன் நின்றார். வேடர் தம்பதிகளைக் கண்ட இராமாநுசர் தாமும் அவர்களோடு வர விரும்புவதாகக் கூறினர். காஞ்சி நோக்கிச் செல்வதாகக் கூறிய வேடர் தம்பதியினருடன் சேர்ந்து கொண்டு பயணம் செய்தார். நள்ளிரவு வரவே மூவரும் ஓரிடம் தங்கினர்.

அப்போது வில்லியின் மனைவி தாகத்துக்கு நீர் வேண்டும் என்று கேட்டார். செய்வதறியாது நின்ற இராமாநுசரின் கண்கள் சிறிது உறங்கின. உறங்கி எழுந்த இராமாநுசர் தம் எதிரே கிணறென்று இருக்கக் கண்டார். அதிலிருந்து நீரைக் கொண்டு வந்து வேடர் தம்பதியினரின் தாகம் தீர்த்தார். அவ்வளவில் தம்பதியர் மறைந்தனர். வேடராக வந்தவர் பெருமாளும் இலக்குமியுமே என அறிந்து இராமாநுசர் உள்ளம் உருகினர். காஞ்சிக்கருகே தாம் ஓரிரவிலேயே வந்து விட்டதையுணர்ந்து கச்சிப் பெருமானுக்கு அச்சாலைக் கிணற்றிலிருந்து நாள் தோறும் நீர் கொண்டு சென்று கைங்கர்யம் செய்து வந்தார்.

கங்கையிலிருந்து மீண்ட யாதவப்ரகாசர் காஞ்சி வந்து ஸ்ரீ ராமாநுசரைக் கண்டு மீண்டும் தம்முடனேயே சேர்த்துக் கொண்டார். அப்போது அங்கே வந்த ஆளவந்தார் ஸ்ரீராமாநுசரைக் கண்டார். ஆனல் இருவரும் உரையாடுதற்குரிய வாய்ப்பு கிடைக்கவில்லை.

ஒருநாள் யாதவப்ரகாசர் உபநிஷதத்துக்கு உரை சொல்லிக் கொண்டிருந்தார். அவ்வுரை பொருந்தாது என்று இராமாநுசர் வாதிட்டார். இதனல் வெகுண்ட யாதவர் தம்மை விட்டு நீங்குமாறு கூறினர். அங்கிருந்தும் புறப்பட்ட இராமாநுசர் தம் தாயின் அனுமதியுடன் திருக்கச்சி நம்பிகளைக் குருவாகக் கொண்டார்.

அப்போது, திருவரங்கத்தில் வாழ்ந்து வந்த ஆளவந்தார் ஸ்ரீ ராமாநுசரைக் காண விரும்பினர். பெரிய நம்பி என்பவரை அனுப்பி இராமாநுசரை அழைத்து வரச் சொன்னர். ஆனல், இராமாநுசர் ஆளவந்தாரைக் காணக் காவிரிக் கரையை நெருங்கும்போது, ஆளவந்தார்பெருமாள் திருவடியைஅடைந்து விட்டார். எனவே, இராமாநுசர் ஆளவந்தாரைக் கண்டு சேவிக்க முடியவில்லையே என்று பெரிதும் துக்கித்தார். பின்னர், அங்கிருந்தும் காஞ்சிபுரம் திரும்பி வந்தார்.

ஒருநாள், திருக்கச்சி நம்பிகளைத் தம் வீட்டுக்கு வந்து உணவருந்துமாறு ஸ்ரீராமாநுசர் வேண்டிக்கொண்டார். அதன்படி நம்பியும் அவர் வீட்டுக்கு வந்து உணவருந்தி விட்டுச் சென்றார். அப்போது இராமாநுசர் வீட்டில் இல்லை. நம்பிகளைத் தலைக்கடையில் வைத்து உணவருந்தச் செய்த தம் மனைவியின் செயலைக் கேட்டுப் பெரிதும் துக்கித்தார்.

மறுநாள், திருக்கச்சி நம்பிகளிடம் ஸ்ரீராமாநுசர் சென்றார். தம் மனத்திலுள்ள ஐயங்கள் சிலவற்றுக்குக் காஞ்சிப் பெருமானிடமே விளக்கம் பெற்றுத் தருமாறு வேண்டிக் கொண்டார். வரதராசர் பெருமானிடம் நேருக்கு நேராகப் பேசும் புண்ணியம் பெற்ற திருக்கச்சி நங்பியும் இராமாநுசரின் உள்ளக்கிடக்கைக்கு உகந்த உத்தாரமாக ஆறு தொடர்களைப் பெருமானிடமே கேட்டு வந்து கூறினர்.

பின், பெரிய நம்பிகளை மதுராந்தகத்தில் கண்டு சேவிக்கப் பெற்று அவர் மூலமாகப் பஞ்ச ஸம்ஸ்காரங்காரங்களும் செய்யப் பெற்றார். பின்னர், காஞ்சிபுரம் வந்து சிலநாள் கழித்து இல்லறத்தை நீத்துத் துறவறம் மேற்கொள்ளலானர். துறவறம் மேற்கொள்ளக் காரணமாயிருந்த நிகழ்ச்சிகள் மூன்று:

1. திருக்கச்சி நம்பிகளுக்கு உணவு படைக்கும் முறையில் கண்ட குறைபாடு. 2. அடியவர் ஒருவருக்கு வீட்டில் அன்னம் இருந்தும் இல்லையென்று சொல்லியனுப்பியது. 3. தம் ஆச்சாரியருடைய மனைவியுடன் வாக்குவாதம் நடத்தியது. இக்குறைகள் மூன்றும் தம் மனைவி இடத்தில் கண்டு மனம் பொறுக்காமலேயே ஸ்ரீ இராமாநுசர் இல்லறத்தை நீத்துத் துறவறம் மேற்கொள்ளலானர். இவரின் பொருமையை உணர்ந்த யாதவப்ரகாசர் தம் சீடன் என்றும் கருதாமல், இவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கித் தம்மைச் சீடராக ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்.

காஞ்சிபுரத்தில் முதலியாண்டான், கூரத்தாழ்வார் முதலான சீடர்களுக்கு ஸ்ரீ இராமாநுசர் பல்வேறு சாஸ்திரங்களில் காணப்படும் நுட்பங்களையெல்லாம் போதித்தார். அப்போது திருவரங்கத்தில் வைணவ சமயத்தை நிர்வகிப்பவர் யாருமில்லாதிருந்தனர். திருவரங்கப் பெருமாளரையர் காஞ்சிக்கு வந்து இராமாநுசரை அழைத்துக் கொண்டு திருவரங்கம் சேர்ந்தார். இராமாநுசர் திருவரங்கம் வந்தபின் திருவரங்கப் பெருமானின் திருக்கோயில் நிர்வாகம் பலவகையிலும் சீர் பெற்றுச் சிறப்புடன் நடந்து வந்தது.

## ராம நாமம்

ராமநாமம் சிலருக்கே உரியதல்ல. அது எல்லோருக்கும் சொந்தம். அதை ஜபிப்பவன் என்றும் பெற்ருத விலைமதிக்கவொண்ணுத பொக்கிஷத்தைத் தனக்கென்று சேமித்துக் கொள்கிறன். நாம் அதிலிருந்து எடுக்க எடுக்க அது மேன்மேலும் வளர்ந்துகொண்டே வருகிறது. அதற்கு ஒரு முடிவே கிடையாது. உபநிஷதம் கூறுவதுபோல முடிவில்லா பரம்பொருள் அது. எல்லா நோய்களுக்கும் கைகண்ட சிறந்த மருந்து ராமநாமம்.

— காந்தியடிகள்.

ஸ்ரீராமானுசர் திருக்கோட்டியூர், நம்பி என்பாரின் பெருமையைக் கேள்விப்பட்டார். அவரிடம் சில ரகஸ்யார்த்தங்களைக் கேட்டு மகிழப் பதினெட்டு முறை நடந்தார். பதினெட்டு முறையும் திருக்கோட்டியூர் நம்பி இவருக்குப் பதில் ஏதும் கூறவில்லை. எனினும் மனந்தளராமல் இராமானுசர் மீண்டும் நம்பியிடம் சென்ருர். இவரின் ஆர்வத்தைக் கண்ட கோட்டியூர் நம்பி இவருக்கும் இவர் மாணுக்கர் இருவருக்கும் ரகஸ்யார்த்தங்களைக் கூறி அவற்றை வேறு யாருக்கும் உபதேசிக்கலாகாது என்ற உறுதி மொழியையும் பெற்ருர்.

ஆனல். இராமானுசரோ இதனல் தனக்கு நரகமோ கிடைப்பதாயினும் பிறர் முக்தி பெற இந்நுண்பொருளை உபதேசித்தே தீருவது என்று முடிவு செய்தார். இதன்படி அவ்வூர்ப்பெரு மக்களைக் கூட்டி ரகஸ்யார்த்தத்தை விளக்கமாகக் கூறினர். இதுகேட்ட நம்பி இவரைப் பாராட்டி எம்பெருமாஞர் என்னும் விருது வழங்கினர்.

தன்னேடு வாதம் செய்த யக்ஞமூர்த்தி என்னும் மாயாவாதியைத் தம் புலமையால் வென்று அவருக்கு அருளாளப் பெருமாள் எம்பெருமாஞர் என்னும் திருநாமம் சூட்டினர். பின்னர் திருமலை நம்பி என்பாரிடம் இராமாயணப்பாடம் கேட்டார். பின்னர், அங்கிருந்துப் புறப்பட்டுக்காஞ்சி வந்து சேர்ந்தார். பின்னர், காஷ்மீர் சென்று பிரம்ம சூத்திரத்திற்குப் பாடம் கேட்டுப் பலரும் உவக்குமாறு ஸ்ரீபாஷ்யம் எழுதியுதவினர்.

அக்காலத்தில், திருவேங்கடவன் எழுந்தருளியுள்ள தலத்தை முருகப் பெருமான் தலமே என்று சிலர் வாதிட்டு வந்தனர். சோழ மன்னனும் உண்மையறிய விரும்பி இராமானுசரைத் திருமலைக்கு வரவழைத்தான். இராமானுசர் தம் வாதத்திறமையால் திருமலைத் தெய்வம் திருமாலே என்பதை நிரூபித்தார். சங்கு சக்கரம் தரித்துத் திருவேங்கடமுடையானே இராமானுசரின் கருத்துக் கேற்பக் காட்சி தந்து உண்மையை விளக்கினர்.

பின்னர், திருமலையிலிருந்தும் புறப்பட்டுத் தென்னரங்கம் வந்து சேர்ந்த இராமானுசர் திருவரங்கப் பெருமாள் கோயிலைத் திருத்தமுறச் செய்தார். நாலாயிரப் பிரபந்தங்களைப் பலவகையிலும் வளரச் செய்தார். இவரின் வாழ்வில் நிகழ்ந்த அற்புதங்கள் பல. இவர் புரிந்த திருத்தொண்டுகள் எண்ணிலடங்கா. சீடர்களிடம் இவர் காட்டிய அன்பிற்குப் பலநிகழ்ச்சிகள் சான்று பகர்கின்றன. நூற்று இருபது ஆண்டுகளுக்கும் மேலாக வாழ்ந்த எம்பெருமாஞரின் சிறப்பைச் சொல்லி முடியாது.

உடையவர், எம்பெருமாஞர் என்னும் திருநாமங்கள்கொண்ட இராமானுசர் ஐவரிடம் பயின்ற பெருமையைப் பெற்றவர்.

பெரியநம்பி என்பாரிடம் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெற்ருர். திருக்கோட்டியூர் நம்பியிடம் ரகஸ்யார்த்தங்களைக் கற்ருர். திருமலை யாண்டானிடம் திருவாய்மொழிக்கும் பொருள் கேட்டறிந்தார். திருமலை நம்பியிடம் இராமாயணத்துக்குப் பொருள் விளக்கம் கண்டார். ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையரிடம் திவ்யப்ரந்தங்கள், தோத்திரங்கள் முதலானவற்றின் நுண்பொருளைப் பயின்ருர்.

இவர் அருளிச் செய்த திவ்யக்ரந்தங்கள் நவரத்தினங்கள் போன்று ஒன்பதாகும். ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம், வேதாந்தசாரம், ஸங்க்ரகம், கீதாபாஷ்யம், சரணுகதிகத்யம், ஸ்ரீரங்கத்யம், ஸ்ரீவைகுண்ட கத்யம், நித்யம் என்பன அவ்வொன்பது நூல்கள்.

ஸ்ரீராமானுசர் சமூகத் தொண்டு செய்வதில் தன்னிகரற்று விளங்கினர். அரிசனங்களைத் திருக்குலத்தார் எனச் சிறப்பித்து அழைத்தார். இவர் திருத்தொண்டினல் தமிழ்ப் பாடல்கள் ஏற்றம் பெற்றன. ஆழ்வார்கள் பாடிய அருந்தமிழை வகுத்தும் தொகுத்தும் கொடுத்துத் திருவீதிகளில் ஓதும் சிறப்பினையும் ஏற்படுத்திக் கொடுத்தார். ஸ்ரீ ஆண்டாள் பாடலுக்குப் பெருமை தந்து தாய்மைக்கும் முதலிடம் கொடுத்த பெருமை இவரையே சேரும். தமிழ், வடமொழி ஆகிய இருமொழிகளும் ஒருங்கே வளரப் பாடுபட்டார். சாதிமத மற்ற சமுதாயம் கண்டு சமய நெறியைப் பரப்பிச் சீர்திருத்தம் செய்தார். சமபந்தி போசனத்துக்கு முதன் முதல் வழி வகுத்த மகான் இவரே! கோயில்களில் பணிபுரிவோர்க்குத் தயிர்ச் சாதம், பொங்கல் முதலான வழங்கிச் சத்துணவுத் திட்டத்தைச் செயற்படுத்தியவரும் இவரே!

வைணவ சமயம் வளரப் பாடுபட்ட உடையவர் சமுதாய சீர்திருத்தத்தையும் சமயத்தின் துணை கொண்டு செய்தது பிற்கால சமயப் புலவருக்கெல்லாம் பெரிதும் சான்ருக அமைந்தது. ★



ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொதுமக்களுக்கோர் நற்செய்தி

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார் மற்றும் பல மகான்களால் ஸ்ரீமுகமும் ஆசியும் அருளப் பெற்று நவசக்தி நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்குரிய தெய்விக சாதனங்கள்**

| எண். | யந்த்ரங்களின் பெயர்கள் | விலை ரூ. |
|---|---|---|
| 1. | ஸ்ரீமகா மேரு பஞ்சலோம் 16×16 10×10 செ.மீ. | நேரில் |
| 2. | ஸ்ரீமகா மேரு பஞ்சலோகம் 6×6 செ.மீ. | 550/- |
| 3. | ஸ்ரீமகா மேரு பஞ்சலோகம் $4\frac{1}{2}\times4\frac{1}{2}$ செமீ. | 350/- |
| 4. | ஸ்ரீமகா கணபதி யந்த்ரம் 8×8 செ.மீ. | 130/- |
| 5. | பீஜாட்சரம் உள்ள ஸ்ரீசக்கரம் 42×42 செ.மீ. | நேரில் |
| 6. | பீஜாட்சரம் உள்ள ஸ்ரீசக்கரம் 32×32 செ.மீ. | நேரில் |
| 7. | ஸ்ரீமகா லக்ஷ்மி மஹா யந்த்ரம் 24×24 செ.மீ. | 1100/- |
| 8. | ஸ்ரீமகா சுதர்ஸனம் 16×16 செ.மீ. | 600/- |
| 9. | ஸ்ரீ சக்கரம் 8×8 செ.மீ. | 130/- |
| 10. | சிதம்பர சக்கரம் '51' | 130/- |
| 11. | சுப்ரமண்யர் | 130/- |
| 12. | சுதர்ஸனம் | 130/- |
| 13. | நவக்கிரக யந்த்ரம் | 130/- |
| 14. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம், ஸ்ரீசாம் ராஜ்ய லக்ஷ்மி, ஸ்ரீமகா சுதர்ஸனம் 16×48 செ.மீ. மூன்றும் சேர்ந்து. | 1600/- |
| 15. | சர்வ ஜன மன தன ஆகர்ஷணம், ஸ்ரீசாம் ராஜ்ய லக்ஷ்மி, சுதர்ஸனம் 8×24 செ.மீ. மூன்றும் சேர்ந்து. | 450/- |
| 16. | சூலினீ, சரபேஸ்வரர், பிரத்யங்கிரா மூன்றும் சேர்ந்து. 16×48 செ.மீ. | 1600/- |
| 17. | தச மகா வித்தை 10 யந்த்ரங்கள் | நேரில் |
| 18. | கண் திருஷ்டி ஒரு புறம், மறுபுறம் சுதர்ஸனம் டாலர் | 65/- |
| 19. | காமாட்சி ஒருபுறம், மறுபுறம் ஸ்ரீசக்கர டாலர் | 65/- |
| 20. | காமாட்சி ஒரு புறம், மறு புறம் தனுகர்ஷண டாலர் | 65/- |
| 21. | காமாட்சி ஒரு புறம், மறுபுறம் மாங்கல்ய பாக்கிய டாலர் | 65/- |
| 22. | ஸ்ரீ முருகன் ஆகர்ஷண டாலர் | 55/- |
| 23. | விவாக பிராப்தி டாலர் | 65/- |
| 24. | ஸ்ரீ ஐயப்பன் டாலர் சன்னிதானத்துடன் | 65/- |
| 25. | ஸ்ரீ சக்கரம் லக்ஷ்மி பீஜத்துடன் டாலர் | 65/- |
| 26. | ஸ்ரீ தேவி கருமாரியம்மன் செப்பு டாலர் | 11/- |
| 27. | நவக்கிரக டாலர் அந்தந்த பிம்பத்துடன் | 65/- |
| 28. | கண் திருஷ்டி யந்த்ரம் (சட்டத்துடன்) | 65/- |
| 29. | எலக்ட்ரானிக் பேங்கிள்ஸ்(அந்தந்த ராசிக்கு) | 25/- |
| 30. | துளசி மணி மாலை வெள்ளிக் கவசத் துடன், எண்ணிக்கை 54 | 125/- |
| 31. | துளசி மணி மாலை வெள்ளிக் கவசத் துடன்: எண்ணிக்கை 108 | 250/- |
| 32. | ருத்ராக்ஷ மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எண்ணிக்கை 54 | 300/- |
| 33. | ருத்ராக்ஷ மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எண்ணிக்கை 108 | 600/- |
| 34. | தாமரை மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எண்ணிக்கை 54 | 180/- |
| 35. | தாமரை மணி மாலை வெள்ளிக் கவசத் துடன் எண்ணிக்கை 108 | 360/- |
| 36. | ரசலிங்கம், ஸ்படிகலிங்கம், மரகதலிங்கம், பாணலிங்கம், சாலிக்கிரமம், பஞ்சாயுத செட், வலம்புரி சங்கு, வீட்டுப் பூஜைக் குரிய பஞ்சலோக விக்ரகங்களும், ரசவினு யகர் ரச மணிகளும் கிடைக்கும். | நேரில் |

108 யந்த்ரங்கள் நவசக்தி நிலையம் வசம் உள்ளன. கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை. ரூ. 105/- வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0.50 தபால் தலையுடன் கீழ்கண்ட விலாசத்துக்கு தொடர்பு கொள்ளவும்.



"லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து"

**ஸ்வாமிஜி ஸ்ரீமுருகபூஷணம்**

ஸ்ரீவித்யா உபாசகர் & தலைவர் நவசக்தி நிலையம்
153, லாயிட்ஸ் ரோடு (ஸ்டேட் பேங்க் எதிரில்) கோபாலபுரம்,
சென்னை-600 086. போன்: 472013, Res. 841254.

# ஸ்ரீமத் ராமாயணமும் சரணாகதியும்

விபீஷணனுடைய வருகையையும், பேசுவதையும் கேட்ட ஸ்ரீராமன், சுக்ரீவன் முதலான முக்கிய வானர வீரர்களை அழைத்து, விபீஷணனைச் சேர்த்துக் கொள்வதா, கூடாதா? என்பது பற்றி ஆலோசனை கேட்டார். பலரும்பலவிதமாகத் தங்கள் அபிப்ரா யங்களைத் தெரிவித்தனர். சுக்ரீவன், அங்கதன், ஜாம்பவான், மைந்தன் உட்பட, பெரும்பான்மையோர், விபீ ஷணனைச் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்று அவரவர் களுக்குப் புலப்பட்டக் காரணங் களுடன் சொன்னார்கள். ஹனு மான் மட்டும் சேர்த்துக் கொள்ள லாம் என்பதற்கானக் காரணங்களைப் பின்வருமாறு கூறினார்: 1.விபீஷணன் வார்த்தைகள் தெளிவாகவும், மிருது வாகவும் உள்ளன; முகக் கலக்க மில்லாமல் தெளிவாக இருக்கிறான். 2. துஷ்டஸ்வபாவம் உள்ளவன் என்று நினைக்க இடமில்லை. 3. விபீ ஷணனிடத்தில் சந்தேகம் ஏற்பட வில்லை. 4. மறைவாய் நமக்குக் கெடு தல் செய்யும் எண்ணமுடையவன், கொஞ்சங்கூட மனதில் சந்தேகமில் லாமல் நம்மிடத்திற்கு வர மாட் டான். 5. தவிர வஞ்சக எண்ணங் களை மறைத்துக் கொள்ளலாமே யன்றி, முகத்தின் விகாரங்களை எப் போதும் மறைத்துக் கொண்டிருக்க முடியாது. 6. மேலும் உசிதமான தேச காலங்களிலும், தான் நினைத்த காரியம் நன்கு முடிய வேண்டும் என்று முயற்சிக்கிறான். 7. இராவ ணன் கெட்ட நடவடிக்கைகளை உடை யவன், துஷ்டன் என்பதையும், தாங் கள் தர்மத்தை அறிந்தவரும், கருணை யும், தயையும் உடையவர் என்றும் அறிந்துள்ளான். 8. மேலும் தாங் கள் வாலியை வதம் செய்து, சுக்ரீ வன் இழந்த ராஜ்யத்தையும், மனைவி யையும் திருப்பி வாங்கிக் கொடுத் ததை நினைத்து, அவ்வாறு தனக்கும் செய்யலாம் என்ற எண்ணத்துடனும் வந்திருக்கலாம். 9. தவிர இராவ ணன் சபையில் தூதனாக நான் சென் றிருந்த போது, தூதவதம் கூடாது என்று வாதாடினான். 10 அரக்கனா லும் நல்லவன் என்று தோன்றுவதால் சேர்த்துக் கொள்ளலாம் என்பது என் அபிப்ராயம்". மேலும் அனுமன் இரா மனைப் பார்த்துத், "தங்களுக்கு இவ் விஷயங்களில் நியாயாந்யாயமும், மேலே நடக்க வேண்டிய காரியங் களும் தெரியாததல்ல. எனவே தங் கள் உத்தரவை எதிர்பார்த்து இருக் கிறோம்" என்றும் அனுமன் சொன் னார்.பிறகு ஸ்ரீராமன், வானர வீரர் களுடைய வார்த்தைகளையும், அனு மன் கூறிய கருத்துக்களையும் கேட்டு மனதில் கொண்டு ஆலோசித்துத் தன்எண்ணத்தை வெளியிடலானார்.

" மித்ர பாவேன ஸம்ப்ராப்தம் நத்ய
ஜேயம் கதஞ்சன
தோஷாயத்யபி தஸ்யஸ்யாத் ஸதா
மேதத் அகர்ஹிதம்"

'சரணாகதி என்று சொல்லி ஒருவன் நண்பன் மாதிரி கபடமாக வந்தாலும், அவனால் எனக்கு உயிருக்கே ஆபத்து நேரிட்டாலும்கூட நான் அவனைக் கைவிட முடியாது. அவனிடம் எந்த விதக் குற்றங்கள் இருந்தாலும் அவனை ரக்ஷிக்க வேண்டும். அவ்விதம் ரக்ஷித்தால்தான் எல்லோரும் போற் றும்படியாக இருக்கும். விபீஷணனைக் கைக் கொள்ளுவதா, கைவிட்டு விடு வதா என்ற எண்ணத்திற்கே இட மில்லை. தவிர என்னை அண்டின வனைக்கைவிடஎனக்குச் சக்தியுமில்லை. அவன் குற்றமுள்ளவன், விரோதியின் உடன் பிறந்தோன் என்பதை எண்ண வேண்டியதில்லை. அவன் குற்றமுள்ள வனாக இருப்பதால், நான் அவனைக் கை விட்டேன் என்று வரக் கூடாது. தர்மாத்மாவாகவும், புண்ணியங்களை உடையவனாகவும் உள்ள ஒருவனை ரக்ஷிப்பதில் எனக்குப் பெருமை கிடையாது', என்று சொன்னார். அப் படியும் சுக்ரீவன் ஆக்ஷேபணை எழுப்பி 'இவன் நல்லவனோ, கெட்ட வனோ, இவனால் நமக்கு ஆகவேண்டி யது ஒன்றுமில்லை. தவிர ஆபத்து சமயத்தில் தன் அண்ணனை விட்டு வந்தவன். தக்க சமயத்தில் நம்மை யும் விட்டுப் போய் விடுவான்' என் கிறார். உடனே இராமர் கூறியதா வது: 'விபீஷணன் நம் பலத்தையும் பார்த்து, இராவணனும், அரக்கர் களும் அழிவது நிச்சயம் என்ற முடி வுக்கு வந்து, இராவணன் அழிந்தால் லங்கா ராஜ்யம் கிடைக்கலாம் என் றும் இருக்கலாம்' என்றார். (இங்கு சுக்ரீவனும் அண்ணன் இறந்த பிறகு ராஜ்யத்தை அடைந்தான் என்பது நினைவில் கொள்ள வேண்டியது) 'எப் படியும் சரணம் என்று வந்தவனைக் கைவிடலாகாது' என்றும், 'தவிர

திரு. டி. கேசவன் — அல்லூர்.

கிடைத்த ராஜ்யத்தை வேண்டாம் எனத் துறந்த பரதன் போன்ற தம்பி களும், பித்ருவாக்ய பரிபாலனத்திற் காக வனவாசம் வந்த என் போன்ற வரையும், என்னைப் பிரிந்ததினால் உயிரையே விட்ட தசரதன் போன்ற தகப்பனாரையும்,நம்மிடம் ஆனுகூல்ய மாய் சரணமடைந்தவனையும், சந் தேகத்துடனும், அன்பின் மிகுதி யாலும் கலக்கமடைந்த உங்களைப் போன்றநண்பர்களையும் காண்பதரிது'

என்று சொன்னார். அப்படியும் சமாதானமடையாமல், சுக்ரீவன், இலக்குவன் துணை கொண்டு இராமன் திருவடிகளில் அடிபணிந்து விபீஷணனைக் கொல்ல அனுமதி கேட்க ஸ்ரீராமர் மிகுந்த கோபம் கொண்டார். கோபத்துடனும், சுக்ரீவனுடைய பயத்தைப் போக்க தன் சக்தியை வெளியிட்டும், இந்த ஓர் இடத்தில் தான் ஸர்வசக்தன் என்பதை சூசமாகச் கூறுகிறார் :

'' ஸுதுஷ்டோ வாப்யதுஷ்டோவா
கிமேஷ ரஜநீசர:
ஸுக்ஷ்மமப்யஹிதம் கர்த்தும் மமா
சக்த: கதஞ்சன
பிசாசாந் தாநவாந் யக்ஷாந் ப்ருதிவ்
யாஞ்சைவ ராக்ஷஸாந்
அங்குல் யக்ரேண தாந் ஹந்யாம்
இச்சந்ஹரிகணேஸ்வர''

'விபீஷணன் எனக்கு எந்த விதத் தீங்கும் செய்ய முடியாது. தவிர உலகிலுள்ள எல்லா பிசாசர்கள், அரக்கர்கள், யக்ஷர்கள், தானவர்கள் முதலியோர் ஒன்று கூடி வந்தாலும், நான் விரும்பினால், ஆயுதமின்றியே, அவர்களைச் சுண்டு விரல் நுனியினாலேயே கொல்லும் சக்தி படைத்தவன்' என்று தன் பரத்வ சக்தியை வெளியிட்டுப் பேசினார். தவிர குற்றம் செய்தவனை ரக்ஷிப்பதில்தான் தனக்குப் பெருமை என்று கூறி வேடன், புறா கதையையும், மனிதன், புலி, குரங்கு கதைகளையும் எடுத்துக் கூறித் தன் முடிவான அபிப்ராயத்தைப் பின் வருமாறு அறுதியிட்டுக் கூறுகிறார்.

'' ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதிச
யாசதே!
அபயம் ஸர்வ பூதேப்யோ ததாமி
ஏதத் வ்ரதம் மம''

அதாவது 'ஒருவன் தன் தகுதியின்மையை யோசிக்காமல், ஒரே ஒரு முறை சரணம் என்று என்னை அடைந்தால், அவனுக்கு ஏற்பட்டுள்ள, எல்லாபயத்தையும் போக்கிக் காத்து ரக்ஷிக்கிறேன். இதுதான் என்னுடைய முடிவான சங்கல்பம்' என்று கூறினார். 'என்னைச் சரணமாகப் பற்றிய சரணாகதனை, என்னை விடப் பார்த்தாலும், நான் அவனைக் கைவிடேன்' என்று கூறி, சுக்ரீவனிடம் பின் வருமாறு கூறினார்:

'' ஆனயைனம் ஹரிஸ்ரேஷ்ட தத்தமஸ்
யாபயம் மயா
விபீஷணோவா சுக்ரீவ யதிவா
ராவணஸ்ஸவயம்''

இதன் பொருளாவது: 'வானரத் தலைவனான சுக்ரீவனே, என்னால் இந்த விபீஷணனுக்கு அபயம் (அடைக்கலம்) அளிக்கப்பட்டுள்ளது. வந்து இருப்பவன் விபீஷணனாலும், அல்லது இராவணனேயானாலும் சரி, அவனை அழைத்து வா' என்று சொன்னார். விபீஷண சரணாகதியை மர்க்கடக நியாயத்தை சேர்ந்தது என பெரியோர் கூறியுள்ளனர். இனி விபீஷண சரணாகதி எந்த விதத்தில் சிறந்தது? எவ்வாறு சரணாகதிக்குரிய லக்ஷணங்கள் அமைந்திருந்தன என்பதைக் கீழ்கண்ட ஸ்லோகம் கூறுகிறது.

'' ஆனுகூல்யஸ்ய ஸங்கல்ப:
ப்ராதி கூல்யஸ்ய வர்ஜ்ஜனம்
ரக்ஷி க்ஷ்யதீதி விஸ்வாஸோ
கோப்த்ருத்வ வர்ணம் ததா
ஆத்ம நிக்ஷேப கார்ப்பண்யே
ஷட்விதா சரணாகதி:''

1. ஆனுகூல்யஸ்ய ஸங்கல்பம் :

அதாவது எம்பெருமான் உகந்து அருளக் கூடியது பகவானுக்கு ப்ரியமான காரியங்களைச் செய்தல் என்பதாகும். நாம் செய்யும் எந்தக் காரியம், பகவானுக்கு ப்ரியத்தை உண்டு பண்ணுமோ அதுவே புண்ணியமாகும். பகவானுக்கு ப்ரியமில்லாத காரியங்களைச் செய்வது பாபமாகும். எல்லாப் பொருள்களிலும் பகவான் வாஸம் செய்கிறான் என்பதை உணர்ந்து, எல்லாரிடத்திலும் அன்பு, தயை, ப்ரியமாகப் பேசுவது போன்ற நற்பண்புகள் கொண்டிருக்க வேண்டும். இங்கு இராவணன் விபீஷணனுடைய அண்ணன், மாற்றான் மனைவியான சீதாபிராட்டியை அபகரித்து, சிறை வைத்திருப்பதைக் கண்டித்தான். மேலும் சீதையையும் ஸ்ரீராமரிடம் கொண்டு விட்டுவிட வேண்டும் என்று நல்லுபதேசத்தையும் செய்தான். இதனால் இராவணனும் மற்றவர்களும் அழிந்து போகாமல் வாழலாம் என்று எடுத்துச் சொன்னான். இதில் விபீஷணனுடைய ஆனுகூல்யஸ்ய சங்கல்பம் என்கிற நல்ல எண்ணம் தெரிகிறது. இது சரணாகதிக்கு முதல் அங்கமாகும்.

2. ப்ராதிகூல்யஸ்ய வர்ஜ்ஜனம் :

அதாவது பகவானுக்கு ப்ரியமில்லாத காரியங்களைச் செய்யாதிருத்தல், தீமையானவைகளை விட்டு விடுதல், பிறர் மனம் நோகும்படியான செய்கைகளையும் பேச்சையும் விடுதல், பகவத், பாகவத அபசாரம் செய்யாதிருத்தல், தீயோர் சேர்க்கை விடுதல் முதலியன. விபீஷணனும், மாற்றான் மனைவியை அபகரித்து வந்ததைப் பல முறைக் கண்டித்து நல்லுபதேசம் செய்தவன். இராவணன் இவ்வுபதேசத்தை ஏற்கவில்லை. இது அவனுக்கு விருப்பமாகவும் இல்லை. தவிர இராவணன் கொடூரமான வார்த்தைகளால் போய் விடுமாறு, சொன்னவுடன் நெருப்புப் பிடித்த வீட்டிலிருந்து புறப்பட்டுக் குளத்தின் நடுவில் விழுவது போல் இராமனிடம் வந்து விட்டான். தவிர, மனைவி, மக்கள் செல்வம், மற்றும் கிடைத்துள்ள எல்லா போகங்களையும் க்ஷண நேரத்தில் உதறி விட்டு வந்தவன். இராகவனைச் சரணமடைய வேண்டும் என்ற ஒரே நல்ல எண்ணத்தோடு வந்தவன். இத்யாதிகாரணங்களினால் விபீஷணனிடம் ப்ராதிகூல்யஸ்ய வர்ஜ்ஜனம் என்ற சரணாகதிக்குத் தேவையான இரண்டாவது அங்கமும் இவனிடமிருந்தது தெளிவாகிறது.

3. ரக்ஷிக்ஷ்யதீதிவிஸ்வாஸம் :

அதாவது பகவான் கைவிட மாட்டான், ரக்ஷிப்பான் என்ற முழு நம்

பிக்கை, சரணமடைபவனுக்கு அவசியம் இருக்க வேண்டும். விபீஷணனுக்கு ஸ்ரீராமனிடம் பூர்ணமான நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. சுக்ரீவனுக்குத் தான் இழந்திருந்த ராஜ்யமும், மனைவியும் திரும்பவும் கிடைத்திருப்பதுவும் தெரியும். தவிர மிகுந்த பலசாலியும், தன் தமையனை இராவணனையும் வென்ற வாலியை ஒரே பாணத்தினால் வீழ்த்தினார் என்பதும் தெரியும். இதனால் இராமருடைய சக்தியும் வீர்யத்தையும் நன்கு அறிந்திருந்தான். அதனால் ஸ்ரீராமன் நிச்சயம் காப்பாற்றுவான் என்ற முழு விஸ்வாஸம் விபீஷணனுக்கு இருந்தது புலனாகிறது. ஆகவே சரணாகதியின் மூன்றாவது அங்கமும் பூர்ணமாக விபூஷணனுக்கு இருந்தது.

4. கோப்த்ருத்வவர்ணம் :

இறைவனைச் சரணமடைவது, பகவானிடம், தன் தோஷங்களையும், குற்றங்களையும் சொல்லி, தன்னைக் கருணையுடன் மன்னித்து ஏற்றுக் கொள்ளும்படி இறைவனை வேண்டுதல் ஆகும். பகவான் சரணமடைந்தவர்களை ரக்ஷிக்க சக்தி உள்ளவனாயும், அவா கொண்டவனாயும் இருந்தாலும், சரணமடைபவனிடமிருந்து ரக்ஷிக்க வேண்டி பிரார்த்தித்தப் பிறகுதான் ரக்ஷிக்கிறான். இங்கு கஜேந்திரன் விருத்தாந்தமும், திரௌபதிக்குப் புடவை சுரந்த விஷயத்தையும் நினைவில் கொள்ளத் தக்கதேயாகும். விபீஷணனும், ஸ்ரீராமன் இருக்குமிடம் வந்து, தான் துர்விருத்தங்களையுடையவனான இராவணனின் தம்பி என்றும், தன் தோஷங்களைக் கூறித் தன்னை ரக்ஷிக்க வேண்டும் என்றும் ஸ்ரீராமனைப் பிரார்த்திக்கிறான். இதனால் கோப்த்ருத்வவர்ணம் என்ற நான்காவது அங்கமும் பூர்த்தியாகிறது.

5. கார்ப்பண்யம் :

அதாவது தன்னையும் தன் உடமைகள் எல்லாவற்றையும் பகவானிடம் அர்ப்பணித்துத் தன்னை எளியோனாக ஆக்கிக் கொள்வது. பகவானுடைய பெருமை என்பது அவனது சௌசீல்யம், சௌலப்யம், வாத்ஸல்யம் முதலான கல்யாண குணங்களாகும். இங்கு விபீஷணன், இராவணனால் கொடூரமான வார்த்தைகளால் தன்னை விட்டுப் போய்விடும்படிக் கூறியதும் தீப்பிடித்த வீட்டிலிருப்பவன் கிளம்புவது போல், மனைவி மக்கள் செல்வம் எல்லாவற்றையும் ஒரே நொடியில் உதறித் தள்ளி, இராமனிடம் வந்து சரணம் பற்றியதாகும். தவிர விபீஷணன் பக்தனாகவும், பாகவதோத்தமனாகவும் இருந்தான் என்பது "விபீஷணஸ்து தர்மாத்மா" எனறவால்மீகியின்சொல்லால்தெரிய வருகிறது. இத்யாதிகளால் சரணாகதிக்கு ஐந்தாவது அங்கமும் பூர்த்தியாகிறது.

6. ஆத்மஸமர்ப்பணம் :

தன்னையும், தன் ஆத்மாவையும் பகவானிடத்தில் ஒப்படைத்து மேல் வீட்டை அளிக்கும் பொறுப்பை அவனிடத்திலேயே விட்டு விடுவது. இங்கு விபீஷணன் இலங்கையை விட்டு ஸ்ரீராமனிடம் கடற்கரைக்கு மேலே ஆகாயத்தில் நின்று கொண்டு 'ஸோஹம் பருஷிதஸ் தேந தாஸவச் சாவமானித:' என்றும், 'சர்வ லோக சரண்யாய, ராகவாய மஹாத்மனே' என்றும், 'ராகவம் சரணம் கத:' என்றும் சொல்லி எல்லாவற்றையும் விட்டுத் தன்னை இராமனிடம் ஒப்படைத்துக் கொண்டான். தவிர விபீஷணனுக்கு ஸ்ரீராமனைத் தவிர வேறு யாரும் புகலிடமாக இல்லை. இராமனே தனக்கு

## கடவுளின் கருணை

ஓர் ஊரில் உப்பு வியாபாரி இருந்தான். அவன் உப்பு மூட்டையைக் கழுதை மேலே வைத்துக்கொண்டு வேற்று ஊர் சந்தைக்குப் போனான். அப்பொழுது நடுவழியில் மழை பெய்ததால் உப்பு மூட்டை கரைந்து விட்டது. அந்த உப்பு வியாபாரிக்கு கடவுள் மீது கோபம் ஏற்பட்டது. 'தெய்வம் இப்படி என் வயிற்றில் அடித்து விட்டதே?' என்று கதறினான். கருணை இல்லாத கடவுளை இனிமேல் வணங்குவதில்லை என்று முடிவு செய்து விட்டான். அவன் வீட்டுக்கு வருகிற வழி காட்டு வழி. அங்கே வெடி மருந்துள்ள துப்பாக்கிகளை வைத்துக்கொண்டு சில திருடர்கள் இந்த வியாபாரியை மடக்கினார்கள். ஆனால், அதே மழையின் காரணத்தால் துப்பாக்கியிலிருந்த மருந்து நமுத்துப் போய் வெடிக்கவில்லை. உயிர் தப்பித்த வியாபாரி, கடவுளின் கருணையை நினைத்து தன் தவறுக்காக மன்னிக்க வேண்டினான். "மழை வந்ததால் உப்புதான் போச்சு; மழை வராவிட்டால் உயிரே போயிருக்கும்'. கடவுளின் கருணையை என்னவென்று சொல்வது?"

— ஸ்ரீ காஞ்சிப்பெரியவர்.

தகவல் : வி. ஸ்ரீதர் — கோயமுத்தூர்.

உபாயமாக வேண்டும் என்று நன்ருக அறிந்துதான் தன்னே ஸ்ரீராமனிடம் அர்ப்பணித்துக் கொண்டான். இத்யாதிகளால் விபீஷணனிடம், சரணுகதிக்குரிய எல்லா அம்சமும் பூர்த்தியாக இருந்தபடியால்தான், விபீஷண சரணுகதியானது, மற்ற சரணுகதிகளே விடச் சிறந்ததாகும்.

10. கடைசியாக உள்ள சரணுகதி, ஸ்ரீராமனே சரணம் செய்தது. இதுவும் யுத்த காண்டத்தில் வருவதாகும். இதுவே பத்தாவது சரணுகதியாகும். தவிர கடைசி சரணுகதியும் ஆகும்.

ஸ்ரீராமனும், மற்றும் சுக்ரீவன், அனுமன் உட்பட எல்லா வானர சைன்யங்களும், இலங்கையின் எதிர் கரையில் இருந்தனர். விபீஷணனும், சரணமடைந்து உடன் இருந்தார். அப்போது உடன் இருந்தவர்களிடம் சுக்ரீவன் 'சமுத்திரத்தை நாம் எல்லோரும் கடந்து, லங்கைக்குச் செல்ல வழி என்ன? எப்படிப் போவது' என்று யோசனே கேட்டார். அப்போது விபீஷணன், சற்று முன்பு தான் ஸ்ரீராமனே சரணமடைந்து, அவன் தன்னே ஏற்றுக் கொண்டிருக்கிறபடியால், ஸ்ரீராமனும் சமுத்ரராஜனே சரணமடைந்தால், சமுத்ரராஜன் உபாயம் ஏதாவது சொல்லுவான். தவிர சமுத்ரமும் இக்ஷ்வாகு வம்சத்து அரசனுன ஸகரருடைய புத்திரர்களால் வெட்டப்பட்டது. சமுத்ர ராஜன் தன் பந்துவான ஸ்ரீராமனுக்கு உதவி செய்யலாம் என்ற யோசனேயை வெளியிட்டான். இவ் அறிவுரை சுக்ரீவன், அனுமன் முதலானேர்க்கு, உகப்பாக இருந்ததால், அதனே ஸ்ரீராமனிடம் தெரிவித்தனர். இந்த யோசனேயும் இராமனுக்கும் உகப்பாக இருந்தது. சமுத்திரத்தில் அணே கட்டாமல், தாமும், வானர சேனேகளும் செல்ல முடியாது. அதனுல் சமுத்திர ராஜனே சரணமடைவதற்காக, கடற்கரையில் தர்ப்பைகளேப் பரப்பி, ஆசமனம் செய்து மூன்று நாட்கள் உபவாசம் இருந்து கொண்டு தர்ப்பையின் மீது படுத்து சமுத்ர ராஜனே உபாசித்தார். இங்கு ஸ்ரீராமன் சரணமடைந்தது பற்றி நாம் தெரிந்து கொள்வதாவது: ஸகலசராசரஜீவன்களுக்கு எல்லாம் அபயம் அளிக்கும் பரமன், இப்போது நதிகளேப் புருஷாகாரமாகக் கொண்டு, சமுத்திர ராஜனேக் குறித்து உபவாசமாகப் படுத்திருந்தார். இதற்குக் காரணம் பின்வருமாறு: ஸ்ரீராமன் ஸர்வஸக்தனுக இருந்தும், லோகத்தில் தர்மத்தை தான் அனுஷ்டித்துக் காட்டவே, சமுத்திர ராஜனேச் சரணமடைந்தது. தவிர சரண்யன் ஸ்வரூபம் எப்படி இருக்க வேண்டும், சரணுகதனுடைய ஸ்வரூபம் எப்படி இருக்க வேண்டும் என்பதை எடுத்துக் காட்டவே, தான் அனுஷ்டித்துக் காட்டினுன் என்று தெரிகிறது: சரணமாக மூன்று நாள் உபவாசமாக இருந்தும் சமுத்திரராஜன் வராததால், கோபம் கொண்ட ஸ்ரீராமன் இலக்குவனே நோக்கி 'சாபம் ஆனய சௌமித்ரே, சமுத்ரம் ஸோஷயாம்யகம்' என்று வில்லில் பாணத்தைப் பூட்டி ப்ரயோகித்தான். பாணத்தின் சக்தியைத் தாங்க முடியாத சமுத்திரராஜன் அஞ்சி ஓடோடி வந்து இராமன் திருவடிகளில் வந்து அடிபணிந்தான். அடிபணிந்த உடனேயே ஸ்ரீராமனுடைய கோபம் போய், குளிர்ந்த மனத்தை உடையவனுக ஆகி, 'என் பாணம் வீண் போகாது, எனவே உன் விரோதிகள் யார் என்று சொல்' அவர்கள் மேல்விட்டு விடுகிறேன்' என்று சொல்லி, சமுத்ர ராஜன் ஏவிய இடத்தில் பாணப்ரயோகம் செய்தான்.

இங்கு இராமனே சமுத்ர ராஜனேச் சரணடைந்தும், அவன் உடனே ஏன் வரவில்லே என்பதற்குச் சமாதானம்: ஸ்ரீராமன் முதலில் ஸாமம் என்ற ஸாத்வீக உபாயத்தை அனுஷ்டிக்க வேண்டிய கடமை என்பதை நன்ருக அறிந்தவர். தவிர எந்த விதத்திலும் சமுத்திர ராஜன், ஸ்ரீராமனுக்கு அபராதம் செய்யாதவன். அபராதம் செய்யாதவனேத் தண்டிக்கக் கூடாது என்ற தர்மத்தை நன்கு அறிந்தவர். இவ்விதமாக ஸ்ரீராமன் மனம், வாக்கு, காயம் என்பதை அடக்கி விதிப்படி உபாசித்தும் சமுத்திர ராஜன் அஞ்ஞானத்தினுலே உடனே வரவில்லே. பாணப்ரயோகம் செய்தவுடன் சமுத்திர ராஜன் ஓடிவந்து கோபங்கொண்டிருந்த ஸ்ரீராமன் திருவடிகளில் அடிபணிந்தான். அடிபணிந்த உடனேயே இராமனுடைய கோபம் போய் குளிர்ந்த மனதை உடையவனுக ஆகி விட்டான். தவிர அனுக்ரஹமும் செய்தான்.

நாம் எவ்வளவு குற்றமுள்ளவர்களாக இருந்த போதிலும், பகவானே அடிபணிந்து நம் குற்றங்களேச் சொல்லி, 'நான் அபராதி, அனன்ய கதி இல்லாதவன், நீதான் எனக்கு உபாயமாக இருக்க வேண்டியவன்' என்று அவன் திருவடிகளில் சரணமடைந்தால், அவன் நம் தோஷங்களேயும், குற்றங்களேயும் பாராது, எல்லாவற்றையும் மறந்து, சரணமடைந்தவர்களேக் கைவிடாமல் காத்து ரக்ஷிக்கிறுன் என்பதே சரணுகதியின் முக்ய தத்துவமாகும்.

முற்றும்.





# ஸ்ரீ சங்கர மஹாத்மியம்

உலகத்தில் ஆசிரியர் என்ருல் நால்வரைக் குறிப்பிடலாம். முதலில் குறிப்பிட வேண்டியவர் ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி. இவர்தான் சங்கரர். சங்கரர் வட விருக்ஷத்தின் அடியில் தக்ஷிணமூர்த்தியாக அமர்ந்து கொண்டு ஸனத், ஸனத் குமாரர்கள் என்ற நான்கு சீடர்கட்கு உபதேசம் செய்கிருர்.

அடுத்தபடியாகக் கூறப்படும் ஆசிரியர் ஸ்வாமிநாதன். இவருக்குத் தகப்பன்சாமி என்ற பெயரும் உண்டு. சுப்ரமண்யர் ஓம்கார விளக்கத்தை தம் தந்தையாகிய சிவபெருமானுக்கு உபதேசித்ததால்இப்பெயர்பெற்ருர்.

அடுத்தபடியாகக் கூறப்படும் ஆசிரியர் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. குருக்ஷேத்திரத்தில் செய்வதறியாது திகைத்து நின்ற அர்ஜுனனுக்குக் கிருஷ்ண பரமாத்மா உபதேசம் செய்தார். அந்த உபதேசம்தான் 'ஸ்ரீமத் பகவத் கீதை'.ஆதலால் கிருஷ்ண பரமாத்மாவிற்கு 'ஜகத்குரு' என்ற பெயரும் உண்டு.

கடைசியாகச்சொல்லப்படுவர்தான் ஆதிசங்கர பகவத் பாதாள். இவருக்கும் 'ஜகத்குரு' என்ற பெயர் உண்டு. இவர் அத்வைதக் கொள்கையை கால் நடையாக இந்தியா முழுவதும் சுற்றி அதன் பெருமையை நிலைநாட்டியதால் இப்பெயர் பெற்ருர். அப்படிபட்ட 'ஜகத்குரு ஆதி சங்கரரை' பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

## அவதார காரணம் :

சதுர்யுகங்கள் தோறும் வேதங்களை வெளியிடவும், வேதாந்தத்தினை விளக்கிடவும் ஸ்ரீபகவான் கிருத யுகத்தில் மஹாவிஷ்ணு கபிலாசாரியராகவும், திரேதாயுகத்தில் சிவபெருமான் தத்தாத்திரேயசாரியாராகவும், துவாபர யுகத்தில் மஹாவிஷ்ணு வியாஸாசாரியராகவும், கலியுகத்தில் சிவபெருமான் சங்கர பகவத் பாதாசாரியாராகவும் அவதரிப்பதாக பிரும்மா சனத் குமாரர்கட்கு அருளினுர். இப்போது நடைபெறும் கலியுக ஆரம்பத்தில் ஜைனம், சாக்தம், காணபேதம், பைரவம், மல்லாரி, சாரஸ்வதம், பௌத்தம், கபாலகம் போன்ற எழுபத்திரண்டு மதங்கள் உண்டாகி, அந்தந்த மதங்களின் உண்மைகளை மக்கள் அறியாமல் கொடிய பாபங்களைச் செய்து கொண்டு உலகமெங்கும் மிகவும் சீர்கெட்டு அதர்மம் எங்கும் பரவியிருந்த சமயத்தில், அதாவது கலியுகம் பிறந்து இரண்டாயிர வருடங்கட்குப் பின்னர் ஸாதுக்களை இரட்சித்துப் பாபிகளைச் சீர்திருத்தஞ் செய்து தர்மத்தை நிலைநாட்டுவதற்காக சிவபெருமானே சங்கர பகவத் பாதாசாரியாராக இப்பூவுலகில் அவதரித்தருள நேர்ந்தது.

## அவதாரம் :

கேரள நாட்டில் இடபாசல ஆரணவாகினி நதிக்கரையில் சுயம்புலக்கேசுவரர் திருக்கோயில் கொண்டருளியிருக்கும் 'காலடி' என்னும் கிராமத்தில் நம்பூதிரி பிராம்மண வம்சத்தில் அத்திரி மஹரிஷி கோத்திரத்தில் வித்தியாதிராஜர் என்பவருக்குப் புத்திரராய் உதித்தவரும் வேத, சாஸ்திரங்கள் நன்குணர்ந்தவரும் சகல

திரு. என். ராமகிருஷ்ணன்,
சேலம்.

ஒழுக்கங்களும் நிறைந்தவருமான 'சிவகுரு' என்பவர், அகஸ்ய மஹரிஷி சிஷ்ய பரம்பரையில் உதித்த மகிபண்டிதன் என்னும் பிராம்மணரின் மகளான சகல நற்குணங்களும் வாய்ந்த 'ஆரியாம்பாள்'என்னும்கன்னியைத் திருமணம் செய்து இல்வாழ்க்கை நடத்தி வந்தார். திருமணம் முடிந்து 27 ஆண்டுகளாகியும் இருவரும் புத்திரனில்லையே என வருந்தி சுயம்பு லிங்கேசுவரரை நோக்கி பன்னிரண்டு ஆண்டுகள் தவம் செய்த பின்னர் ஓரிரவில் அவர்கள் கனவில் பரமேஸ்வரன் அந்தணர் கோலத்தில் தரிசனமளித்து 'தீர்க்க ஆயுளுள்ள அறிவில்லாத பேதையர்களாகிய பல மக்கள் வேண்டுமா? அல்லது அற்ப ஆயுள் உள்ள பூரண ஞானம் நிறைந்த ஒரே புத்திரன் வேண்டுமா?' என்று கேட்டார். ஞான பூரணனாகிய மகனொருவனே போதுமென்று இருவரும் கூறினர். சிவபெருமானுடைய ஆசியால், அருளால், க்ருபையால் ஆர்யாம்பாள் கர்ப்பவதி ஆனாள். பரமேஸ்வரனுடைய தேஜஸ் அந்த அம்மாள் வயிற்றுள் புகுந்தது.

பத்து மாதங்கள் நிறைந்தவுடன் இக்கலியுகத்தில் மூவாயிரத்து ஐம்பத்தெட்டாவது ஆண்டுக்குச் சரியான விக்கிரம சகம் பதினொன்காவதாகிய ஈசுவர வருஷம், வைகாசி மாதம், சுக்ல பக்ஷம், பஞ்சமி திதியில் திருவாதிரை நட்சத்திரமும் ஆதிவாரமும் கூடிய சுபயோக சுபதினத்தில் சுப லக்னத்தில் சுபக்கிரகங்கள் கூடி நிற்கவும், நல்ல மூகூர்த்தத்தில் சிவ குருவின் மனைவியாராகிய ஆரியாம்பாள் சுகமாக ஒரு நல்ல புதல்வனைப் பெற்றாள். ஜோதிடர்கள் அவர் பிறந்த லக்னத்தை கணித்து 'இவன் ஸர்வக்ஞனாக விளங்குவான். பல நூல்களை இயற்றுவான். பேசும் திறனில் சரஸ்வதியை வெல்வான்' என்று கூறினார்கள். தலையில் சந்திரனுடைய குறியையும், நெற்றியில் கண்ணின் குறியையும், தோள்களில் சூலாயுதத்தின் அடையாளத்தையும், உடலில் ஸ்படிகத்திற்கு நிகரான நிறத்தையும் கொண்டு காண்பவருக்குச் சுகத்தை விளைவித்து சங்கரரின் அடையாளத்தைக் குறிக்கின்றபடியால் அக்குழந்தைக்குச் 'சங்கரன்' என்று நாமகரணமிட்டனர். அக்குழந்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தது.

சங்கரரின் அற்புத பால லீலைகள் :

சங்கரருக்கு ஐந்தாவது வயதில் உபநயனம் நடைந்தேறியது. அது முதல் குருசேவை செய்து கொண்டு வேத சாஸ்திரங்களைப் பயின்று வந்தார். ஒரு நாள் ஒரு ஏழை அந்தணர் வீட்டில் பிக்ஷை எடுக்கச் சென்றார். 'பவதி பிக்ஷாம் தேஹி' என்று கூறினார். அந்த வீட்டிலிருந்த அந்தணர் மனைவி பிக்ஷை இடுவதற்கு எந்தப் பொருளும் இல்லாமைக் குறித்து வருந்தினார். கடைசியில் பாத்திரத்தில் என்றோ போட்ட நெல்லிக்கனியை மனமுவந்து அவருக்கு அளித்தார். அப்பெண்மணியின் தரித்திர நிலை குறித்து சங்கரர் கண் கலங்கி அவருடைய தரித்திர நிலையைப் போக்க லட்சுமியைக் குறித்து துதி செய்தார். அதுதான் புகழ் பெற்ற 'கனகதாரா' ஸ்தோத்திரம். சங்கரருடைய துதியைக் கண்டு சந்தோஷம் அடைந்த திருமகள் அந்த இல்லம் முழுவதையும் தங்கத்திலான நெல்லிக்கனிகளால் நிரப்பினார். இவ் அற்புதத்தை கண்ட அனைவரும் ஆச்சர்யம் அடைந்து புகழ்ந்தார்கள். இவ்வாறு பல லீலைகள் அவருடைய சிறு வயதில் நடைபெற்றன.

சந்நியாசம் அடைதல் :

ஒரு சமயம் சங்கரரின் தாயார் அகஸ்தியரை அழைத்து சங்கரருக்குத் திருமணம் செய்வது பற்றி வினவ அவர் 'உனது புத்திரன் ஜகதாசாரியனாகுவனேயன்றி சம்சாரியாகான்' என்றும், மேலும் 'எட்டாவது வயது நெருக்கியபடியால் விரைவில் சந்நியாசம் பெற்று பிறப்பினை மாற்றிக் கொள்ளில் ஆயுள் கூடிவரும் 'என்று கூறிவிட்டுச் சென்றார். இது கேட்டு ஆரியாம்பாள் மிகவும் துக்கத்தில் ஆழ்ந்தாள். சங்கரர் தாயாரின் அஞ்ஞானம் நீங்கும்படி நல் தத்துவத்தை எடுத்துரைத்து சமாதானப்படுத்தினார்.

இப்படிச் சில நாட்கள் சென்றபின் சங்கரருக்கு எட்டு வயதாயிற்று. ஒரு நாள் காலையில் சங்கரர் தமது அன்னையுடன் ஸ்நானம் செய்யும் பொழுது முதலை ஒன்று அவர் காலைப் பற்றியது. அப்போது சங்கரர் தம் அன்னையை நோக்கி "அம்மா! நான் முதலை வாயில் அகப்பட்டுக் கொண்டேன். இனியாவது சந்நியாசத்திற்கு உத்தரவு கொடுங்கள்" என்று கேட்டார். அப்போது அசரீரீ வாக்கு 'இப்போதே சந்நியாசம் பெற்றுக் கொண்டால் இன்னும் எட்டு வருடம் பிழைத்திருக்கலாம்'' என்றது. அது கேட்ட அன்னையார் திடுக்கிட்டு ஒன்றும் தோன்றாமல் 'அப்பா! நீ சந்நியாசம் பெற்றாகிலும் உயிர் வாழ்ந்தால் போது'மென்று ஆசீர்வதித்தாள். சங்கரர் அவ்விடத்திலேயே பிரேஷ மந்திரத்தை உச்சரித்து சந்நியாசத்தைத் தானே பெற்றுக் கொண்டார். உடனே இவருடைய காலைப் பற்றியிருந்த முதலை சாபம் நீங்கி கந்தர்வ உருவம் கொண்டு சங்கரரை வணங்கி கந்தர்வ லோகம் சென்றது. உடனே சங்கரரின் அன்னையார் சங்கரரை நோக்கி'என் கடைசிக் காலத்தில் உன் கையாலேயே நற்கதி அடைய விரும்புகிறேன்' என்று சொன்னவுடன் சங்கரர் 'தாயே! உமது கடைசிக் காலத்தில் என்னை நினைத்தால் நான் எங்கிருப்பினும் அக்கணமே உம்மையடைந்து செய்ய வேண்டிய கடனை முடித்து, நற்கதி பெற்றுவிப்பேன். இதில் சந்தேகம் வேண்டாம்' என்று வாக்களித்தார். பிறகு தாயாருடைய பாத கமலங்களை வணங்கி அவர் உத்தரவைப் பெற்று கண்ணபிரானை

தியானம் செய்து கொண்டு இல்லறத்திலிருந்து தமக்குக் கிரம சந்நியாசம் அருளத்தக்க சற்குருவை நாடிச் சென்றார்.

குரு கடாக்ஷம் :

காடுகளையும், ஆறுகளையும், நகரங்களையும், மலைகளையும் கடந்து சங்கரர் நர்மதைக் கரையிலுள்ள 'ஸ்ரீ கோவிந்த பகவத் பாதர்' வாசம் செய்யும் வனத்தில் புகுந்தார். மாலை நேரம். அவர் வசிக்கின்ற குகையின் வாயிலை அடைந்து குகையை மூன்று முறை வலம் வந்து வாயிலை வணங்கி, அவரைத் துதி செய்தார். சங்கரர் துதித்ததைக் கேட்டவுடன் கோவிந்த பகவத் பாதர் ஆனந்த மேலீட்டால் நிர்விகற்ப சமாதியிலிருந்து கலைந்து சங்கரருக்கு முறைப்படி கிரம சந்நியாசம் கொடுத்தருளி நான்கு வேதங்களின் முடிவாய் விளங்கும் மஹா வாக்கியத்தை உபதேசித்தருளினர். ஸ்ரீ சங்கரர் அவரிடமிருந்து வேதாந்த நூல்கள் அனைத்தையும் கற்றுக் கொண்டார்.

இவ்வாறு சங்கரர் குரு சேவை செய்து வரும்போது ஒரு நாள் தன் ஆசிரியர் குகையில் த்யானத்தில் உள்ளபோது நர்மதை ஆற்றில் வெள்ளம் அதிகரித்து வருவதை கண்ட சங்கரர் தன் கமண்டலத்தில் அப்பெரிய வெள்ளத்தை புகுத்தினர். இதை அறிந்த கோவிந்த பகவத் பாதர் சங்கரரிடம், முன்னொரு காலத்தில் வியாஸ முனிவர் 'எந்த பால சந்நியாசி உம்மால் உபதேசம் பெற்று பெருகு வெள்ள நீரை கமண்டலத்தில் அடக்குவானோ அவனே பிரம்ம சூத்திர முதலிய வேத முடிவுகளனைத்திற்கும் பாஷ்யம் முதலிய விளக்கவுரைகள் செய்து நம்முடைய பரம்பரைக்குப் புகழ் விளைவிப்பான்' என்று கூறியுள்ளதைக் குறிப்பிட்டு 'நீ இங்கிருந்து புறப்பட்டு நிர்மலமான காசி க்ஷேத்திரமடைந்து சிவபெருமான் அருள் பெற்று உலகம் நன்மையுறச் சீர்திருத்தங்களைச் செய்வாயாக!' என்று வாழ்த்தியருளினர்.

பிறகு ஸ்ரீ சங்கரர் குருவினுடைய தாமரை போன்ற பாதங்களை வணங்கி காசி க்ஷேத்திரத்தை அடைந்து சிவ பெருமானை வணங்கி அங்குத் தங்கினர். காசியில் சந்நியாச ஆசிரமம் அமைத்து அத்வைதச் சித்தாந்தத்தை ஆயிரக்கணக்கான சீடர்களுக்கு உபதேசித்தார். தருக்கர், மீமாம்சர், சாங்கியர் முதலியோரது கல்விச் செருக்கு ஒழிந்து வந்தது.

சங்கரர் இயற்றிய சாஸ்திரங்கள் :

சங்கரர் தமது பனிரெண்டாம் வயதில் விஷ்ணு ஸகஸ்ரநாமத்திற்கும், மற்றும் பிரம்ம சூத்திரம், பத்து உபநிஷதங்கள், நரசிங்கதாபினி, கௌதகி பிராம்மணம், பகவத்கீதை, ஸநத்ஸுஜாதியம் போன்ற இன்னும் பல அத்வைத சித்தாந்தமாகிய பாஷ்யங்களை எழுதி ஆத்ம போதம், தத்துவ போதம், அபரோக்ஷானுபூதி, அத்வைத ஸாஹஸ்ரி, உபதேசஸாஹஸ்ரி, சிவாநந்தலகரி, சௌந்தர்யலகரி, தட்சிணாமூர்த்தி தோத்திரம், விவேக சூடாமணி போன்ற 124 சாஸ்திரங்களுக்கும் அதிகமாக இயற்றி, அந்த சாஸ்திரர்களை மாணாக்கர்கட்கு உபதேசித்துக் கொண்டிருந்தார்.

பஜகோவிந்தம் :

சங்கரர் ஆத்மா கடைத்தேறுவதற்கு இவ்வுலக கல்வி சிறிதும் பயன்படாதென்பதை விளக்க,

"பஜகோவிந்தம் பஜகோவிந்தம் பஜ
கோவிந்தம் மூடமதே
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதேகாலே நஹி
நஹி ரக்ஷதி டுக்ருக்கரணே"

என்ற பனிரெண்டு ஸ்லோகங்களால் மரண சமயத்தில் யமன் வந்து இழுக்கும் போது, கற்ற கல்வி உன்னைக் காப்பாற்றாது, ஆகவே கோவிந்தனை பஜனை செய் என்று உலகில் உள்ள மாயைகளைக் களையவல்ல இந்த மோகமுத்கரத்தை இயற்றினர்.

பத்மநாபர் :

ஒரு நாள் சங்கரர் ஸனந்தனர் என்ற சீடரின் குரு பக்தியை மற்ற சீடர்களுக்கு விளக்கும் பொருட்டுக் கங்கை நதியின் அக்கரையிலிருந்து ஸனந்தனரை தம் அருகே வருமாறு அழைத்தார். ஸனந்தனர் உடனே குருவின் திருவடியைத் தியானித்துக் கொண்டே கங்கையில் நடக்க ஆரம்பித்தார். அப்போது கங்காதேவி ஒவ்வொருடியின் கீழும் தாமரை புஷ்பங்களைத் தோற்றுவித்துத் தாங்கினாள். பத்மங்களால் தாங்கப் பெற்றபாதத்தை உடையவராதலால் ஆசாரியார் இவருக்கு 'பத்மபாதர்' என்று பெயரிட்டுக் குரு பக்தியின் சிறப்பை விளக்கினார்.

வியாஸ பகவான் அருள் :

ஸ்ரீ சங்கரர் கங்கை நதிக் கரையில் ஒரு நாள் வியாஸ பகவான் இயற்றிய பிரம்ம ஸூத்திரத்திற்கு தாம் இயற்றிய பாஷ்யத்தை பத்மபாதர் முதலிய ஆயிரக்கணக்கான சீடர்கட்கு போதித்துக் கொண்டிருக்கும் போது பிரம்ம சூத்திரத்திற்கு கர்த்தாவாகிய வியாச பகவான் வயோதிக பிராம்மணராக ஆச்சாரியாரிடம் வந்து சில கடின சூத்திரங்களுக்குப் பொருள் கூறும்படிக் கேட்க, சங்கரர் அவற்றிற்குச் சரியான பதில்களைக் கூறினார். இவ்வாறு இவ்விருவருடைய சாஸ்திர வாதம் எட்டு நாளாகியும் முடியாததைக் கண்ட பத்மபாதர் வந்தவர் வியாச பகவானே என்பதை தியானத்தில் உணர்ந்து துதி செய்தார். சங்கரரும் வந்தவர் வியாசபகவான் என்று அறிந்தவுடன் நமஸ்கரித்து துதித்தார். உடனே வியாச பகவான் தமது நிஜ வடிவத்தைக் காட்டினார். அப்போது சங்கரர் 'நான் வந்த காரியம் ஆயிற்று. எனக்கு ஏற்பட்ட பதினாறு வருடங்களும் பூர்த்தியாயின! இப்போது தங்கள் முன்னிலையிலேயே எனது சரீரத்தை விட்டுவிட தங்கள் கிருபை வேண்டும்' என்றார். அதைக் கேட்ட வியாச பகவான், 'நான் இன்னும் பதினாறு வருடங்களைக் கொடுத்தேன்! நீ ஆமண்டலாசாரியான் என்று புகழ்பட இந்த பாஷியங்கள் உலகமெங்கும் பரவச் செய்து பின்னர் திருக்கயிலையை அடைக' என்று அருளிச் செய்து மறைந்தருளினார்.

மண்டன மிசிரர் :

பகவானாகிய ஸ்ரீசங்கரர் வித்வானாகிய 'மண்டன மிசிரரை' வெல்லும் பொருட்டு காசியிலிருந்து புறப்பட்டு மாகிஷ்மதி என்னும் நகரத்தை அடைந்து மண்டன மிசிரர் இல்லத்திற்குச் சென்றார். அன்று அவருடைய இல்லத்தில் சிரார்த்தம். தனது தவ வலிமையினால் ஜைமினி முனிவரையும், வியாஸ முனிவரையும் முறைப்படி வரவழைத்து அவர்களுடைய பாதங்களைப் பூஜை செய்து கொண்டிருந்தார். அதைக் கண்ட சங்கரர் அங்குச் சென்று தர்ப்பைக் கூர்ச்சம் வைத்து பூஜிக்கும் விஷ்ணு ஸ்தானத்தில் நின்றார். மண்டனமிசிரர் வேதத்திலுள்ள கர்ம காண்டத்தை முக்கிய மார்க்கமாகக் கொண்டுள்ளதால் சகல கர்மமும் நீங்கிய சந்நியாஸிகளை வெறுப்பது வழக்கம். இதனால் சங்கரரை கண்டவுடன் கோபம் கொண்டு 'எங்கிருந்து மொட்டை?' என்று கேட்டார். அதைக் கேட்ட சங்கரர் 'கழுத்திலிருந்து மொட்டை' என்று வேறு அர்த்தம் கற்பித்துக் கூறினார். இவ்வாறு கடும் சொற்களுடன் மண்டன மிசிரர் விவாதிக்கிறார். ஆனால் சங்கரர் புன்சிரிப்புடன் பதிலளித்தார். பிறகு வியாச முனிவரின் கட்டளைப்படி சங்கரரை விஷ்ணு ஸ்தானத்தில் பூஜித்து பிக்ஷையேற்றுக் கொள்ளும்படி வேண்டினார். உடனே சங்கரர், 'நான் வாத பிக்ஷைக்கு வந்திருக்கிறேன் அன்றி இந்த பிக்ஷைக்கு வரவில்லை' என்று சொன்னார். மறுநாள் வாதம் என்று இருவரும் தீர்மானித்துக் கொண்டனர்.

மறுநாள் ஸ்ரீ சங்கரர் சிஷ்யர்கள் புடைசூழ மண்டல மிசிரர் வீட்டிற்கு வந்தார். மண்டன மிசிரரும் கல்விகள் யாவற்றிலும் திறமை வாய்ந்த 'சாரதை' என்ற பிரசித்தி பெற்ற தனது மனைவியை நடுவராக வைத்து வாதத்தைத் தொடங்கினார். ('சரஸ்வதிதேவி'யே. துர்வாச முனிவரின் சாபத்தால் உபய பாரதி என்ற சாரதையாக அவதரித்தாள்). இருவரும் ஒரு பிரதிக்ஞை எடுத்து கொண்டனர். ஸ்ரீசங்கரர் 'எனக்குத் தோல்வி ஏற்பட்டால் நான் துறவை விட்டு காஷாய வஸ்திரத்தை அகற்றி வெண்மையான வஸதிரத்தைத் தரித்துக் கொள்கிறேன். அதுபோல மண்டன மிசிரர் 'நான் தோல்வி அடைந்தால் வெண்மை வஸ்திரத்தை நீக்கி சாஷாய வஸ்திரத்தை தரித்துக் கொள்கிறேன்' என்று உறுதியாகச் சொன்னார். 'சாரதை' இரண்டு புஷ்ப மாலைகளை எடுத்து வந்து ஒரு மாலையை தன் கணவன் கழுத்தில் இட்டு மற்றொரு மாலையைச் சங்கரருக்கு அர்ப்பணம் செய்து அணிந்து கொள்ளும்படி வேண்டினாள். 'எவருடைய கழுத்திலுள்ள மாலை வாடுகிறதோ அவரே தோற்றவர்' என்று சரஸ்வதி விளக்கினாள். வேதத்திலுள்ள கர்ம காண்டத்தை முக்கியமாகக் கொண்டு ஜைமினி முனிவரால் இயற்றப்பட மீமாம்ச மதத்தை கொள்கையாக கொண்ட மண்டன மிசிரர் 'நாம் யாவரும் கர்மா செய்ய வேண்டும். நாம் செய்த கர்மமே அதற்கேற்றப் பலனைத் தரும். இவ்வுலகம் எப்போதும் இப்படியே இருக்கின்றது. சந்நியாசிகள் கர்மாவை விட்டப்படியால் கர்ம பிரஷ்டர்கள்' என்பதைக் கொண்டு வாதாடினார். சங்கரர் கர்ம காண்டமானது வேதத்தின் ஞான காண்டத்திற்கு சாதனமாம். ஆகவே சங்கரர் வேதத்திலுள்ள ஞான காண்டத்தையே முக்கிய மார்க்கமாக கொண்டு 'நாம் செய்த கர்மாவுக்கு கர்மாவே பலன் கொடுக்க மாட்டாது. பலன் கொடுக்க பரமேஸ்வரர் ஒருவர் உண்டு. அவரே பலன் கொடுப்பவர். பிரம்மம் ஒன்றே சத்தியம்.

(34-ம் பக்கம் பார்க்க)

# திருமலை வழிகாட்டி

நாள்தோறும் ஆயிரக்கணக்கில் வருகை புரிந்து, நெடியோனின் திருவருள் பெறும் பெருமையுடையது திருமலை. இப்புண்ணியத் தலத்திற்கு வருகை புரியும் அவ் யாத்திரிகப் பொதுமக்களுக்கு உதவிடும் வகையில் திருமலை பற்றிய குறிப்புகள், கோயிலில் நடைபெறும் சேவைகள், உற்சவ விவரங்கள், குடில்களின் வாடகைக் கட்டணத் தகவல்கள், போக்குவரத்துப் பற்றிய பொதுத் தகவல்களுடன் கூடிய செய்திகள் யாவும் இம்மாத இதழில் வெளியிடப்பட்டுள்ளன. இது பலருக்குப் பல வகைகளில் பயனுள்ளதாக அமையும் என்றே நம்புகிறோம்.

— ஆசிரியர்.

## திருப்பதியில் தங்கு வசதிகள்

**இலவச தங்கு வசதிகள் :**

திருப்பதி இரயில் நிலையத்திற்கு வடக்கே ஸ்ரீகோவிந்த ராஜ தர்ம சத்திரம் மற்றும் ஸ்ரீகோதண்டராம தர்ம சத்திரம் உள்ளன. இதிலுள்ள அறைகளில் மேஜை, நாற்காலி, படுக்கைவசதிகள் கிடையா. யாத்திரிகர்கள் சமையல் செய்துகொள்ள வசதிகள் உள்ளன. தங்குவசதிகளுக்குத் தர்மசத்திரத்திலுள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தின் கண்காணிப்பாளரை அணுகவும். தொலை பேசி எண். 2991.

**மேஜை, நாற்காலி வசதிகளுடன் கூடிய தங்குமிடங்கள் :**

இரயில் நிலையத்திற்கு எதிரிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்ம சாலை.

**தினசரிக் கட்டண விவரங்கள் :**

| சிறியன | பெரியன | நான்கு படுக்கைகள் |
|---|---|---|
| ரூ. 20/- | ரூ. 30/- | ரூ. 40/- |

**கண்** காணிப்பாளரை அணுகுங்கள்;

தொலை பேசி எண்: 4344.

இரயில் நிலையத்திற்கு வடக்கே உள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி.

ரூ. 30/- அறைத்தொகுதி ஒன்றிற்கு. திருப்பதி உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலை பேசி: 4611.

சித்தூர் சாலையில் உள்ள ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதன வசதி கொண்டது.)

சிறிய அறைத்தொகுதி ரூ. 40/-
பெரிய அறைத்தொகுதி ரூ. 65/-

திருப்பதி உதவி செயலாட்சித் தலைவரை (வரவேற்பு) அணுகவும். தொலைபேசி எண். 4302.

## திருமலையில் தங்கு வசதிகள்

திருமலைக்கு வரும் யாத்திரிகர்களுக்கு, தன்னால் முடிந்த அளவு அதிக அளவில் தங்குவதற்காக தி. தி. தேவஸ்தானம் பல வசதிகளை செய்து தந்துள்ளது. அடிப்படை வசதிகளைக் கொண்ட, மேஜை, நாற்காலி படுக்கை வசதிகள் இல்லாது, பெரிய குடும்பத்தினர் தங்குவதற்காக இலவச பெரிய சத்திரங்கள் உள்ளன. மின்சாரம் மற்றும் நீர் ஆகியன இலவசம்.

இலவச தங்கு வசதிகளுக்கு, பேருந்து நிலையத்திற்கு அருகு உள்ள மத்திய வரவேற்பு அலுவலகத்தினை அணுகவும். யாத்திரிகர்கள் ஓய்வு எடுத்துக் கொள்ள கொட்டகைகள் வேயப்பட்டுள்ளன. கட்டணம் செலுத்தி எடுக்கப்படும் தங்கு வசதிகள் மத்திய வரவேற்பு அலுவலகத்தில் செய்து தரப்படும்.

முன் கூட்டியே பதிவு செய்து கொள்ள, தேவையான பணத்திற்கான மணியார்டர் ரசீது அல்லது டிமாண்ட் டிராப்டு ஒன்றினை "உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி. தேவஸ்தானம், திருமலை-517504" எனும் முகவரிக்கு ஆங்கில விண்ணப்பத்துடன் அனுப்பவும். 20 நாட்களுக்கு முன்கூட்டியே அனுப்பியத்தொகை, தங்கும் தேதி, தங்கும் நபர்கள் ஆகிய விவரங்களை அனுப்புதல் வேண்டும்.

மேஜை, நாற்காலி, படுக்கை வசதிகளுடன் கூடிய கீழ்வரும் தங்கு வசதிகள் உள்ளன.

I. ஹில் வ்யூ சொகுசு அறைத் தொகுதிகள், சங்குமிட்டா, சேஷாத்ரி, அஞ்சனாத்ரி நகர், கருடாத்ரி நகர் குடில்கள்.

'ஏ' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-

'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-

எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 25/-

எச்.வி.டி.சி. அறைத் தொகுதிகள் (ஒவ்வொன்றும்) (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-

எச். வி. சி. விருந்தினர் விடுதி பெரிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 50/-

எச். வி. சி. விருந்தினர் விடுதி சிறிய அறைத் தொகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 25/-

இந்த இடங்களுக்கு முன்கூட்டியே இடவசதிக்கான முன்பதிவு செய்து கொள்ளலாம்.

II. மங்களாபாவி குடில்கள், டி.பி.சி. 3-வது வரிசை மற்றும் ஆழ்வார் ஏரி குடில்கள் டி. பி. வெளிப்புற குடில்கள்.

'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 20/-

'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-

வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 ரூ. 70/-

எம். பி. சி. 'ஏ' பகுதி (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 20/-

எம்.பி.சி. 'பி' பகுதி (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 12/-

டி.பி., ஏ.டி.சி., அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி உள்ளது) ரூ. 15-

டி.பி., ஏ.டி.சி. அறைத் தொகுதிகள் (சுடுநீர் வசதி இல்லாதது) ரூ. 10/-

ஏ.டி.சி. கீழ்த்தளம் முதல் வரிசை

'ஏ' பகுதி ரூ. 30/-

'பி' பகுதி ரூ. 30/-

ஆர்ஜித சேவை கிருஹஸ்தர்கள் மட்டுமே இத்தங்கு வசதிகளுக்கு முன்பதிவு செய்து கொள்ளலாம்.

III. எஸ்.வி. விருந்தினர் விடுதி மற்றும் என்.ஜி.ஜி. விடுதிகளில் தனி அறைத் தொகுதி ரூ. 50/-

எஸ்.வி. விருந்தினர் விடுதியில் மூலை அறைத் தொகுதி ரூ. 60/-

எஸ்.வி. விருந்தினர் விடுதியில் பெரிய அறைத்தொகுதி ரூ. 70/-

IV. பிரயாணிகள் மாளிகையில் உட்குடில்கள் ரூ. 70/-

சிறப்பு அமைப்புக் குடில்கள் ரூ. 100/-

எச்.ஆர்.ஜி. குடில்கள் ரூ. 250/-

முன் பதிவு செய்தல் முடியாது. கிடைக்கும் காலி இடங்களைப் பொறுத்து ஒதுக்கப்படும்.

V. ஹில் வ்யூ சொகுசு குடிலில் உள்ள மோடிபவன் (நான்கு அறைத்தொகுதிகள்) ஒவ்வொன்றும் ரூ. 250/-

ஸ்ரீ நிகேதன் விருந்தினர் விடுதி ஒவ்வொன்றும் ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 750/-

இந்திரா விருந்தினர் விடுதி (ஒவ்வொரு அறைத் தொகுதியும்) ரூ. 250/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 1000/-

பால குடீரம்-ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 250/-

அறைத்தொகுதி முழுவதும் ரூ. 1500/-

ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி ஓர் அறைத் தொகுதி ரூ. 250/-

அடித்தளத்திலும் முதல் தளத்திலும் உள்ள பெரிய அறைத்தொகுதிகள் ஒவ்வொன்றும் ரூ. 750/-

விருந்தினர் விடுதி முழுவதும் ரூ. 2500/-

கோகுலம் விருந்தினர் விடுதி (குளிர்ச் சாதன வசதி உள்ளது) ரூ. 500/-

முன்பதிவு வசதி கிடையாது. வேண்டுகோளுக்கிணங்க காலி இடங்களைப் பொறுத்து வழங்கப்படும்.

'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு-I) தி.தி.தே. திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

VI. திருமணக் கூடங்கள் :

சங்குமிட்டா குடில்கள் கிழக்கு எண். 260, 266, 267, 272. ரூ. 75/-

டி.பி. குடில்கள் எண். 71 வரிசை III எண்கள் 136 மற்றும் 152 ரூ. 75/-

ரூயா குடில்/கோகினேனி குடில் மற்றும் ஏ.டி.சி. எண். 99 ரூ. 100/-

சிதம்பரம் செட்டியார் குடில் ரூ. 125/-

பாலாஜி திருமண மண்டபம் ரூ. 500/-

சீதாராம திருமண மண்டபம் ரூ. 1000/-

முன் பதிவுக்கு, 'இணை செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருமலை' எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

## விதிகள்

* ஒரு நாள் என்பது, இடவசதி ஒதுக்கப்படும் நேரத்திலிருந்து 24 மணி நேரங்களாகும்.
* குறிப்பிட்ட தங்கு வசதி கிடைக்கவில்லையாயின் வேறு தங்கு வசதி கொடுக்கப்படும். இதனால், அதிகப்படியான தொகை மீதி இருக்குமாயின், அது திருப்பித் தரப்படும்.
* முன் பதிவு என்பது ஒரு நாளுக்கு மட்டுமே செய்யப்படும். இத்தொகை செலுத்தியவர் வராவிட்டால் முன் பதிவு ரத்து செய்யப்படுவது மட்டுமின்றி, அத்தொகை திருப்பித் தரவோ அல்லது பின்னொரு நாளுக்குச் சரி செய்யவோ மாட்டாது.

திருமணக்கூடங்கள் பொறுத்தவரை ஒதுக்கப்படும் ஒரு நாள் கால நேரமானது காலை 6 மணி முதல் கணக்கிடப்படும்.

* அதிகக் கூட்டம் இருக்கும் காலங்களில், முன்பதிவு ஒரு நாளுக்கு மட்டுமே உண்டு.

* குறிப்பிட்ட அல்லது கொடுக்கப்பட்டக் காலத்திற்கும்மேலேயேதங்குவசதியைப்பயன்படுத்தினுல், அவர்களிடமிருந்து அபராதமாக சாதாரணமாக வசூலிக்கப்படும் தொகையைப்போல் மூன்று மடங்கு வசூலிக்கப்படும்.

* இக்கையேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள கட்டணங்களும், கால நேரங்களும் மாற்றக் கூடியன.

## திருமலைக்கு வருகை புரியும்போது நீங்கள் என்ன செய்யவேண்டும்

தயவுசெய்து

* திருமலைக்குச் செல்லும்முன் உங்களுடைய இஷ்ட அல்லது குல தெய்வத்தை வழிபடுங்கள்.

* முன்கூட்டியே உங்களுடைய பெயரை பிரயாணத்திற்கும் இடவசதிகளுக்கும் பதிவு செய்துகொள்ளுங்கள்.

* ஸ்ரீவேங்கடேஸ்வரரைத் தரிசிக்குமுன்பு, கோயிலுக்கு அடுத்துள்ள புஷ்கர்ணியில் ஸ்நாநம் செய்து ஸ்ரீ வராஹ சுவாமியைத் தரிசியுங்கள்.

* கோயிலுக்குப் புகுமுன் நன்ருக குளித்து நல்லாடைகளை உடுத்திக் கொள்ளுங்கள்.

* கோயிலுக்குள் ஸ்ரீ வேங்கடேஸ்வரரையே மனதில் தியானியுங்கள்.

* கோயிலுக்குள் அமைதியுடன் இருந்து மனதிற்குள் "ஓம்! ஸ்ரீ வேங்கடேஸாய நமஹ" என்று தியானியுங்கள்.

* திருமலைக்கு அருகிலுள்ள பாபநாசம், ஆகாச கங்கை ஆகிய புனித தீர்த்தங்களில் நீராடுங்கள்.

* திருமலையில் இருக்கும்போது நல்லது பேசி, நமது பழமையான கலாசாரத்திற்கு மதிப்பளியுங்கள்.

* சக யாத்திரிகர்களுடன் அன்புடன் பழகி, ஆன்மீகச் சூழ்நிலையில் அகமகிழுங்கள்.

* உண்டியலில் மட்டுமே உங்கள் காணிக்கைகளைச் செலுத்துங்கள்.

* கோயில் பற்றிய மற்றும் உங்கள் வழிபாடுகள் பற்றிய விவரங்களுக்கு தி.தி. தேவஸ்தானத்தாரின் விசாரணை அலுவலகங்களை நாடுங்கள்.

## திருமலைக்கு வரும்போது நீங்கள் பின்பற்றக் கூடாதன

தயவுசெய்து

* உங்களுடன் அதிக அளவு பணமோ, விலையுயர்ந்த நகைகளையோ கொண்டு வராதீர்கள்.

* அசைவ உணவு வகைகளை உட்கொள்ளாதீர்கள்.

* மது மற்றும் போதை தரும் பொருட்களை உட்கொள்ளாதீர்கள்.

* கோயில் அரங்கிற்குள் அல்லது அதனைச் சுற்றியுள்ள இடத்திலோ புகைப் பிடிக்காதீர்கள்.

* தங்கு வசதிகளுக்காக புதியோரை அணுகாதீர்கள்.

* இறைவனைத் தரிசிக்க தவிர, மற்றெந்த காரணத்திற்காகவும் திருமலைக்கு வருகை தராதீர்கள்.

* தரிசனத்திற்காக வரம்பு மீறிய ஒரு சூழ்நிலைக்கு உள்ளாவாதீர்கள். 'க்யூ' வரிசையில் இருந்து, தரிசனம் செய்யுங்கள்.

* கோயிலுக்குள் துப்புதல் போன்ற அசுத்தமானவற்றைச் செய்யாதீர்கள்.

* கலாசார காரணத்திற்காகவோ, வழக்கில் இருப்பதன காரணமாகவோ கோயிலுக்குள் வரக்கூடாத சூழ்நிலையில் இருப்பின், கோயிலுக்குள் வராதீர்கள்.

* திருமலையில் உள்ள எல்லா மலர்களும் ஏழுமலையானுக்கே உரித்தாகையால், மலர் வகைகளை சூடாதீர்கள்.

* பிச்சைக்காரர்களை உற்சாகப்படுத்தாதீர்கள்

## அறக்கொடை திட்டங்கள்

ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய லட்டு தான திட்டம் :

கிருஹஸ்தரின் விருப்பப்பட்ட நாளின் போது, அவருடைய பெயரில் 25 கிராம் எடையுள்ள லட்டுப் பிரஸாதமானது யாத்திரிகர்களுக்கு விநியோகிக்கப்படும். இதற்கான அறக்கொடை தொகை ரூ. 1 லெட்சமாகும்.

உதயாஸ்தமான சர்வ ஸேவா திட்டம் :

கிருஹஸ்தரின் விருப்ப நாளின்போது, அவருடைய சார்பில், ஸ்ரீ வேங்கடேஸ்வரருக்கு எல்லா வைதீக சமயச் சடங்குகளும், சேவைகளும் நடத்தப்படும். இதற்கான அறக்கொடைத் தொகை ரூ 1 இலட்சமாகும். இச் சேவை வெள்ளிக்கிழமையில் நடைபெறுவேண்டுமானுல் அதுபோது அறக்கொடை தொகையானது ரூ. 3 இலட்சமாகும்.

1. நன்கொடையாளர்க்கும் அவருடைய குடும்பத்தாருக்கும் (மொத்தம் ஆறு நபர்கள்) சிறப்பு இடவசதி செய்து தரப்படும்.

2. குறிப்பிட்ட நாளன்று நன்கொடையாளர் மற்றும் அவர் குடும்பத்தாரும் எல்லா தேவை தரிசனங்களுக்கும் அனுமதிக்கப்படுவார். மேலும் எல்லா ஆர்ஜித சேவைகளுக்கும் அனுமதிக்கப்படுவர்.

3. திருமலையானின் கல்யாணுத்சவத்தின்போது உத்சவ மூர்த்திகளுக்குக் காணிக்கையாக்கப்பட்ட ஒரு சேஷ வஸ்த்ரம் வழங்கப்படும்.

4. 25 லட்டுகள், 5 வடைகள் கொடுக்கப்படும்.

**பாலாஜி அர்ச்சனை திட்டம் :**

பத்தாண்டுகளுக்கு, ஒவ்வொரு ஆண்டும் கிருஹஸ்தரின் விருப்பப்பட்ட நாளின்போது அவரது பெயரில் இறைவனுக்கு அர்ச்சனை செய்யப்படும். இதற்காக தி.தி. தேவஸ்தானத்திற்கு அறக்கொடை தொகை ரூ. 5686 செலுத்த வேண்டும். செலுத்தப்பட்ட ரூ. 5686 ஆனது 10 ஆண்டுகளுக்குப் பிறகு வட்டியுடன் ரூ. 15000 ஆக உயரும். இதனுல் ரூ. 15,000/- ஐ அறக்கொடையாக அளித்த திருப்தி கிருஹஸ்தருக்குக் கிடைக்கும்.

**அனுமதிக்கப்படும் நபர்களின் எண்ணிக்கை:**

| | |
|---|---|
| சுப்ரபாதம் : | 3 |
| அர்ச்சனை ; | 2 |
| தரிசனம் : | 3 |
| பிரஸாதம் : | ஒரு சிறிய லட்டு, வடை |
| பஹுமானம்: | ஓர் உத்தரீயம் |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய பிரஸாத தான/அறக்கொடைதிட்டம்:**

இத்திட்டத்தின் கீழ், கிருஹஸ்தர் ரூ. 500/- செலுத்தினுல், அவர் விருப்பப்பட்ட நாளின்போது 20 உணவுப் பொட்டலங்கள், அல்லது 10 லட்டுகள் அல்லது 10 வடைகள் யாத்திரிகர்களுக்கு பகிர்ந்தளிக்கப்படும். அவர் விரும்பும் நாள் பிறந்த நாளாகவோ, திருமண நாளாகவோ, பெற்றோர்களின் நினைவு நாளாகவோ இருக்கலாம்.

நன்கொடையாளர் ரூ. 500/-ப் போன்று பன்மடங்கு தொகை செலுத்தலாம். அத்தொகை ரூ. 10,000/- ஆக இருப்பின், அதனுல் வரும் வட்டித்தொகை கொண்டு தி. தி. தே. குறிப்பிட்ட நாளன்று யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கும். மேலும் நன்கொடையாளரைச்சார்ந்த 5 நபர்களுக்கு இலவச தரிசனத்திற்கு தி.தி.தே. அனுமதிக்கும் (இது 5 சிறப்பு நுழைவு தரிசனச் சீட்டுக்களின் மதிப்பான ரூ. 125/- ஆகும்.

இத்தொகைக்கு, 1961 - ஆம் ஆண்டு வருமான வரி சட்டம் பிரிவு 80, (ஜீ) 2, (பி) என்பதின் கீழ் வருமான வரிவிலக்கு உண்டு.

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம் :**

திருமலையில் உள்ள யாத்திரிகர்களுக்கு இலவசமாக முழு உணவு வழங்கிடும் வகையில் இத்திட்டம் தி. தி. தே. தேவஸ்தானத்தாரால் மேற்கொள்ளப்பட்டுள்ளது. தேவஸ்தானத்திற்கு குறைந்தபட்சமான ரூ. 5 இலட்சம் அல்லது இது போன்று பன்மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும் தி. தி. தேவஸ்தானம் அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். இந்த மொத்தத் தொகை ஒரு தேசிய வங்கியில் இருப்பு வைக்கப்பட்டு, ஒவ்வொரு ரூ. 5 இலட்சத் திற்கும் பெறப்படும் வட்டித் தொகையினைக் கொண்டு, நாள்தோறும் நூற்றுக்கணக்கான யாத்திரிகர்களுக்கு இலவச உணவு வழங்கப்படும். இத்தொகையினை குடும்பத்தில் ஒருவரோ அல்லது ஐவரோ அல்லது இரு வியாபார நிறுவனங்கள் சேர்ந்தோ வழங்கலாம். ஆனல் கணக்கு ஒருவர் பெயரில் மட்டுமே இருக்கும். ஆனுல் இத் தொகை வழங்கியவர்களுக்குத் தனித் தனியாக, வருமான வரி 80 (ஐ) பிரிவின் கீழ் வரி விலக்கு அளிக்கப்படும்.

உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும். மேலும் யாத்திரிகர்களுக்குக் கொடுக்கப்படும் இலவச உணவுச் சீட்டிலும் அவர்கள் பெயர் இருக்கும். நாள்தோறும் காலையில் நடைபெறும் இறைவன் கொலுவு சேவையின் போது அவர்களின் பெயர் வாசிக்கப்படும்.

தி. தி. தே. கீழ்வருபவற்றை வழங்கும் :

* நன்கொடையாளர் மற்றும் அவர் குடும்பத்தார்க்கு வருடத்தில் மூன்று நாட்களின் போது திருமலையில் இலவச தங்கு வசதி செய்து தரப்படும்.
* இந்த மூன்று நாட்களின் போதும் இடைவெளியின்போது இலவச தரிசனமும், ஹாரத்தியும் அமைக்கப் படும்.

## வசதிகள்

**திருமலைக்கு நடந்து வரும் யாத்திரிகர்களுக்கான வசதிகள் ;**

தங்களுடைய வேண்டுதல்களில் ஒன்ருக பலர் திருமலைக்கு நடந்து வருகின்றனர். தி. தி. தேவஸ்தானம் அவர்களுக்காகக் கீழ்வரும் வசதிகள் செய்து உள்ளது.

* யாத்திரிகர்களின் மூட்டை முடிச்சுகள் இலவசமாக திருப்பதியிலிருந்து திருமலைக்கு எடுத்துச் செல்லப்படும். திருப்பதியிலுள்ள தி.தி.தே. சத்திரங்களில் ஏதாவது ஒன்றில் அல்லது அலிபிரி சாவடியில் (டோல் கேட்) தங்கள் சாமான்களை ஒப்படைத்து, அங்குத் தரப்படும் தங்கள் சாமான்களுக்கான டோக்கனை திருமலையில் 'மத்திய வரவேற்பு நிலையத்தில்'

காட்டுவார்களாயின், அங்கு அவர்களுடைய சாமான்கள் அவர்களுக்கு ஒப்படைக்கப்படும்.

* காலி கோபுரம், சித்தியேகாடு, மாமண்டூரு மிட்டா, நரசிம்ம சுவாமி கோயில், மோகால மிட்டா மற்றும் பல இடங்களில் யாத்திரிகர்கள் சமையல் செய்து கொள்ள வசதிகள் உள்ளன.

* நடை பாதை முழுவதும் குடிநீர் வசதி உண்டு.

* நடைபாதையின் 7வது மைலில் மாமண்டூரு மிட்டாவில் தாங்களே முன வந்து நடத்தும் 'இஸ்கான்' எனும் தனியார் அமைப்பு நடத்தும் உணவு விடுதியில் சுகாதாரமான உணவு வகைகள் கிடைக்கும்.

* மறைவிடங்கள் உள்ளன. ஓய்வு எடுத்துக்கொள்ள முக்கியமான இடங்களில் நிழற்குடைகள் உள்ளன.

* திருமலைக்குச் செல்லும்வழியில்யாத்திரிகர்களைகளவு, ஏமாற்றுதல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கும் பொருட்டு வழிநெடுகிலும் காவல்துறை, சூர்க்கா, பாதுகாப்புத்துறை ஆகியோரைச் சார்ந்த பகல்-இரவு ரோந்து ஏற்பாடுகள் உண்டு.

* உள்ளூர் ஒலிபரப்பு சாதனை மூலம் சமய நிகழ்ச்சிகள் ஒலிப்பரப்பப்படும்.

## 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களுக்கு வசதிகள்

'க்யூ' கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களின் காத்திருக்கும் நேரத்தை கணிசமாகக் குறைக்கும் வகையில், தினசரி சேவை நேரங்களில் பல மாற்றங்களை தி. தி. தேவஸ்தானம் செய்துள்ளது. அதே சமயத்தில் கொட்டகைகளில் இருக்கும் யாத்திரிகர்களுக்கு வெகுநேரம் காத்திருக்கும்படியான ஒரு களைப்பு சூழ்நிலையை நீக்கும் வகையில் கீழ்வரும் வசதிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

* மிகவும் விசாலமான சுகாதாரமான, காற்றோட்டமான பெரிய கொட்டகைகளில் மின் விசிறிகள் பொருத்தப்பட்டுள்ளன.

* காம்பிபோர்டு நிறுவனத்தாரால் உள்ளே உணவு வகைகள் விற்பனை.

* நியாயமான விலையில் உணவுப் பொட்டலங்கள் விற்பனை.

* ஆந்திர மாநில பால்வள நிறுவனத்தாரின் சுத்தமான பால் விற்பனை.

* தி. தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட தெய்வ வண்ண உருவப்படங்கள், மற்றும் நூல் வெளியீடுகள் விற்பனை.

* 'க்யூ' வரிசைகளிலும் மறைப்பிட வசதிகள்.

* வரையறுக்கப்பட்ட எல்லைக்குள் ஒளிபரப்பப்படும் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள்.

* பக்தி நிகழ்ச்சிகள், இசை போன்றன ஒலிப்பரப்பப்படல்.

* 'க்யூ' கொட்டகைகளிலும் தங்களுடன் தங்கள் சாமான்களை சுமக்கவொண்ணு வண்ணம், 'சாமான்கள் வைப்பு அறைகள்' வசதிகள்.

* 'க்யூ' கொட்டகைகளின் வாயில் அருகேயே 'காலணிகளை' வைப்பதற்கு வசதிகள்.

* தலாளிகள் மற்றும் ஏமாற்றுப்பேர்வழிகளின் தவறான வழிகளைத் தடுப்பதற்கும், புகார்களை ஏற்று உதவி செய்யவும் கோயில் வாயிலருகே (முகத்துவாரம்) அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருத்தல்.

* 'க்யூ' கொட்டகைகளில் யாத்திரிகர்களின் தேவைகளையும், வசதிகளையும் கவனிக்க அலுவலர் ஒருவர் நியமிக்கப்பட்டிருத்தல்.

## மற்றைய வசதிகள்

**உணவு விடுதி :**

நவீன வசதிகளுடன் கூடிய திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் உணவு கட்டிடத் தொகுதியில் நியாயமான விலையில் உணவு வகைகள் இங்குக் கிடைக்கும்.

**இலவச மருத்துவ வசதி :**

சேஷாத்ரி நகர் அருகில் அஸ்வினி மருத்துவமனையில் யாத்திரிகளுக்கு இலவச மருத்துவ வசதி அளிக்கப்படும்.

**தபால் மற்றும் தந்தி அலுவலகம் :**

தந்தி வசதி உட்பட எல்லா உதவிகளும் கிடைத்திடும் வகையில் தபால் மற்றும் தந்தி அலுவலகம் ஒன்று மத்திய வரவேற்பு அலுவலகத்தின் அருகே செயற்பட்டு வருகின்றது.

**தி. தி. தேவஸ்தான கூட்டுறவு அங்காடி :**

நியாயமான விலையில் மளிகைச் சாமான்களை யாத்திரிகர்கள் தி. தி. தேவஸ்தானத்தாரின் எல்லா கிளை கூட்டுறவு அங்காடிகளிலிருந்து பெறலாம்.

**இலவச பேருந்து போக்குவரத்து :**

காட்டேஜுகள், சத்திரங்கள், கோயில் மற்றும் பல இடங்களினை இணைக்கும் வகையில் குறிப்பிட்ட தடங்கள் வழியாக இலவசமாகத் திருமலையில் நான்கு பேருந்து போக்குவரத்துகள் செயல்பட்டு வருகின்றன.

**விமானப் போக்குவரத்து :**

விமான தளத்திலிருந்து திருமலைக்கும், திருமலையிலிருந்து விமான தளத்திற்கும் செயற்படும் வகையில், ஆந்திர மாநில போக்குவரத்துக் கழகம் சொகுசு பேருந்துகளை நடத்தி வருகின்றது.

**கல்யாண கட்டாக்கள் :**

இறைவனுக்குத்தலைமுடிசெலுத்தும்படியானவேண்டுதல்களை பூர்த்தி செய்து கொள்ளும் வகையில், திருமலையில் கல்யாண கட்டா ஒன்று உள்ளது. குடில்களிலும் தலைமுடி மழித்துக் கொள்ள வசதிகள் உண்டு. தலைமுடி மழிப்பவர்களுக்கு பணம் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை. கல்யாணகட்டாக்களில் இலவசம். குடில்களில்ரூ.5/-

**நூல் விற்பனை நிலையம் :**

தி.தி. தேவஸ்தானத்தாரால் வெளியிடப்பட்ட எல்லா சமய நூல்களும், மத்திய வரவேற்பு அலுவலகம், ஆயிரக்கால் மண்டபம், 'க்யூ' கொட்டைகள் ஆகிய இடங்களில் இருக்கும் விற்பனைக் கூடுகளில் கிடைக்கும்.

**இரயில்வே பிரயாண முன்பதிவு அலுவலகம் :**

பேருந்து மற்றும் இரயில் பிரயாணத்திற்கான டிக்கெட்டுகளையும் முன்பதிவு டிக்கெட்டுகளையும் மத்திய வரவேற்பு அலுவலகத்திலுள்ள இவ் அலுவலகத்தில் (புக்கிங் ஆபீஸ்) பெற்றுக் கொள்ளலாம்.

**நடமாடும் பழுதுபார்க்கும் வண்டி :**

மலைவழிச் சாலையில் பழுதடைந்த வாகனங்களைப் பழுது பார்ப்பதற்காக மெக்கானிக்குகள், வாகனங்களின் உதிரி பாகங்களையும் கொண்ட நடமாடும் பழுது பார்க்கும் ஊர்தி ஒன்று தி.தி.தே. செயற்படுத்தி வருகின்றது. இதற்காக, திருமலை அல்லது திருப்பதி டோல்கேட் ஊழியர்களை அணுகுதல் வேண்டும்.

## செயற்கைக் கை கால் உறுப்பு வழங்கும் நிலையம்

உடல் ஊனமுற்றோர்க்குச் செயற்கைக் கை, கால் உறுப்புகளை வழங்கும் வகையில் தி. தி. தேவஸ்தானம் இத்திட்டத்தை மேற்கொண்டுள்ளது. இத்திட்டத்தினை இறைவனின் திருத்தொண்டாகக் கொண்டு, இத்திட்டத்திற்குச் செயற்கைக் கை கால் உறுப்புக்களை வாங்கவும், அவற்றை இணைக்கவும் மற்றும் திருப்பதி தி.தி.தே. மத்திய மருத்துவமனையுடன் இணைக்கப்பட்டுள்ள செயற்கைக் கை, கால் உறுப்புநிலையத்தின் மற்றைய தேவைகளுக்கும் தாராளமாக நன்கொடையினை பக்தர்கள் வழங்கலாம்.

## புரோஹிதர் சங்கம்

தங்களுடைய வேண்டுதல்களை நிறைவேற்றும் வகையில் திருமலையில் வைதீக சமயச் சடங்குகளை நடத்திக் கொள்ள உதவும் வகையில், அனுபவம் மிக்க தேர்ந்த புரோஹிதர்களைக் கொண்ட சங்கம் ஒன்றினை தி. தி. தேவஸ்தானம் அமைத்துள்ளது. யாத்திரிகளின் நன்மைக்காக, இதற்காக வசூலிக்கப்பட வேண்டிய கட்டணங்களையும் தி. தி. தே. நிர்ணயித்துள்ளது.

சங்கல்பம், நாமகரணம், சௌலம், உபநயனம், திருமணம், பிண்டப் பிரதானம் மற்றும் வேறு வைதீக சமயச் சடங்குகளை நடத்த விரும்பும் பக்தர்கள், தி. தி. தேவஸ்தான விசாரணை அலுவலக உதவியுடன் இப்புரோஹித் சங்கத்தினை அணுகவும்.

## ஆர்ஜித சேவைகள்
## கிருஹஸ்தர்க்குச் சில ஆலோசனைகள்

சேவை அல்லது உற்சவம் நடத்தும் கிருஹஸ்தர் வேஷ்டியும் மேல் துணியும் (உத்தரீயம்) மட்டுமே அணிதல் வேண்டும்.

வைகுண்டம் 'க்யூ' கட்டிடத் தொகுதியிலிருந்து கோயிலுட் செல்ல வேண்டும். முகத்துவாரத்திலிருந்து நேரிடையாகச் செல்ல முடியாது.

கிருஹஸ்தர்களுக்கு வேண்டும் அளவுக்கு தத்யோதனம், புளியோதரை போன்ற அன்ன பிரஸாதங்கள் வழங்கப்படும். தேவை போக மீதி இருக்கும் அன்ன பிரஸாதங்கள், கிருஹஸ்தரின் அனுமதியுடன், யாத்திரிகர்களுக்கு இலவசமாக விநியோகிக்கப்படும்.

சேவை/உற்சவம் நடத்த விரும்பும் கிருஹஸ்தர், அதற்கான குறிப்பிட்ட தொகையை 'எக்ஸிக்யூட்டிவ் ஆபீஸர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் பெயரில் ஒரு டி. டி. மூலம் முன்கூட்டியே அனுப்புதல் வேண்டும். பிறகு பெயிஷ்கார் (திருமலை) அவர்களிடமிருந்து அத்தேதிக்கான மற்றும் உத்சவத்திற்கான ஒப்புதல் தாக்கீதனைப் பெறல் வேண்டும்.

ஒரு நாளுக்கு முன்பேயே திருமலைக் கிளை விஜயா வங்கியில் இதற்கான தொகையைச் செலுத்தலாம். அதுபோது சலானில் குறிப்பிடப்படும் சேவை / உத்சவத் தேதியே, அவ்வுத்சவம் நடைபெறும் தேதியாகும்.

பிரஸாதம் பெற வேண்டிய முறை :

தொகையை விஜயா வங்கியில் செலுத்தியிருந்தால், அந்த வங்கி சலானிலேயே பிரஸாதத்தினைப்பற்றிய குறிப்பு கொடுக்கப்பட்டிருக்கும். அந்தச் சலானின் ஒரு நகலினை அன்ன பிரஸாத இலவச கௌண்ட்டரில் அல்லது வகபடியில்(கோயிலின் பணியார விற்பனைக் கௌண்ட்டரில்) செலுத்தி, பிரஸாதங்களைப் பெற்றுக் கொள்ளலாம்.

டி. டி. மூலம் தொகை செலுத்தப்பட்டிருந்தால், அவர்களுக்கு அனுப்பப்பட்டிருக்கும் தாக்கீட்டினை பணியாரங்களுக்கு வகபடியிலும், அன்னபிரஸாதங்களுக்கு இலவச அன்னபிரஸாத விநியோகக் கௌண்ட்டரிலும் செலுத்திப் பெற்றுக் கொள்ளலாம்.

## தினசரி சேவைகள்

1. சுப்ரபாதம் :

சுப்ரபாதம் வேத பாராயணக் குழுவினரால் பாடப்படும். ரூ. 50/- சீட்டு வாங்கிய நபர்கள் அனுமதிக்கப்படுவர். இடம் போதாமையினால், 200 சீட்டுகள் மட்டுமே விற்கப்படும். இச்சீட்டுகள் ஒரு நாளைக்கு முன்பு திருமலை விஜயா வங்கியில் விற்கப்படும். இச் சேவைக்கு வங்கி காசோலை அனுப்பி, ஆர்ஜிதம் அலுவலர் மூலமாக ஊர்ஜிதப்படுத்தலாம்.

2. தோமால சேவை :

இச்சேவை காலை 3-45 முதல் 4-30வரை 45 நிமிடங்களுக்கு நடத்தப்படும். இச்சேவைக்காக ரூ 100/- செலுத்தி சீட்டு வாங்கும் பக்தர்கள் வைகுண்டம் கட்டிடம் வழியாக அனுமதிக்கப்படுவர். இச்சீட்டுகள் திருமலை விஜயா வங்கியில் ஒரு நாளுக்கு முன்பே கொடுக்கப்படும். தங்களுடைய ஊர்களிலிருந்து வங்கி காசோலை அனுப்பி இச்சேவையில் பங்கேற்க விரும்பும் பக்தர்கள், ஆர்ஜித அலுவலகத்தின் தாக்கீது ஒன்றன் மூலம் ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளலாம்.

3. அர்ச்சனை :

இச்சேவை நாளும் காலை 4-45 முதல் 5-30 மணி வரை 45 நிமிடங்கள் நடைபெறும். ரூ. 100/- செலுத்தி இச்சேவையில் பங்கேற்கும் பக்தர்கள் வைகுண்டம் 'க்யூ' கட்டிடம் வழியாக அனுமதிக்கப்படுவர். ஒரு நாள் முன் கூட்டியே, இதற்கான சீட்டுகள் விஜயா வங்கியில் விற்கப்படும். தங்கள் ஊர்களிலிருந்து வங்கி காசோலை மூலமாக இச்சேவையில் பங்கேற்கும் பக்தர்கள் திருமலை ஆர்ஜிதம் அலுவலகத்திலிருந்து பெறப்படும் தாக்கீது ஒன்றின் மூலமாக தங்கள் சீட்டுகளை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளலாம்.

குறிப்பு :

நபர் ஒருவர் ரூ. 200/- செலுத்திப் பங்கேற்படியான இவ் 2, 3, சேவைகள் மொத்தமாக வெள்ளிக்கிழமைகளில் காலை 8-00 மணியிலிருந்து 9-00 மணி வரை நடைபெறும். ரூ. 400/- செலுத்திப் பங்கேற்கும் அமந்த்ரணோத்ஸவ சேவார்த்திகளும் அனுமதிக்கப்படுவர்.

4 அமந்த்ரணோத்சவம் :

(தோமால சேவை மற்றும் அர்ச்சனை) இச்சேவைக்கான கட்டணம் ரூ. 400/-. தோமாலா சேவைக்கு இருவரும், அர்ச்சனைக்கு இருவரும் வைகுண்டம் க்யூ கட்டிடம் வழியாக அனுமதிக்கப்படுவர். கிருஹஸ்தர்க்கு 1/8 சோலா அளவு பொங்கல் பிரஸாதம் அளிக்கப்படும். இச் சேவைக்காக வங்கி காசோலை அனுப்பும் கிருஹஸ்தர்கள் திருமலை ஆர்ஜிதம் அலுவலகத்திலிருந்து பெறப்படும் தாக்கீதினைக் கொண்டு இச்சேவை ஊர்ஜிதப்படுத்தப்படும். இச்சேவைக்கான சீட்டுகளை விஜயா வங்கியில் ஒரு நாள் முன்பேயே பெறலாம்

5. ஏகாந்த சேவை :

நபர்ஒருவர் ரூ. 50/-செலுத்தி இச்சேவையில் பங்கேற்கலாம். ஸர்வதரிசனம் முடிந்த பிறகு ஏகாந்த சேவை நடைபெறும். ரூ. 50/-க்கு சீட்டு பெறும் நபர்கள் இதற்கு அனுமதிக்கப்படுவர். இதற்கான சீட்டுகள் ஆந்திரா வங்கியில் வருபவர்களுக்கு 'முதலில் வருபவர்களுக்கு முதல்' என்ற முறையில் விற்கப்படும். இவர்கள் வைகுண்டம் 'க்யூ' கட்டிடம் வழியாக அனுமதிக்கப்படுவர்.

6. கல்யாணோத்சவம் :

கல்யாணோத்சவம் என்பது பிரம்மோசத்வம் மற்றும் சில விழா நாட்களைத் தவிர, கல்யாணமண்டபத்தில் நடைபெறுவதாகும்.

| | |
|---|---|
| கட்டணம் : | ரூ. 2000/- |
| அனுமதி : | 10 நபர்கள் |
| நேரம் : | ~~1-00 மதியம்~~ |
| பிரஸாதம் : | லட்டுகள் (பெரியன), 15 வடைகள், 15 அப்பங்கள், 15 தோசைகள், தத்யோதனம், புளியோதரை, சர்க்கரைப் பொங்கல் (ஒவ்வொன்றும் 1/8 சோலா அளவு) |

பஹுமானம் : வஸ்த்ர பஹுமானம் (ஒரு பட்டு உத்தரீயம் மற்றும் ஒரு ரவிக்கைத் துண்டு).

**பிரத்யேக கல்யாணோத்சவம் :**

வழக்கமான சமய வைதீக சடங்குகளுடன் நடைபெறும் கல்யாணோத்சவமாகும்.

கட்டணம் : ரூ. 500/-

அனுமதி : 5 நபர்கள்

பிரஸாதங்கள் : ஒரு லட்டு (சிறியது), ஒரு வடை.

பஹுமானம் : ஒரு பருந்தி உத்தரீயம் மற்றும் ரவிக்கைத் துண்டு.

வங்கி காசோலை அனுப்பி இவ்வுற்சவத்தில் பங்கேற்க விரும்பும் கிருஹஸ்தர்கள் அவர்கள் கேட்டுக்கொள்ளும் நாட்களில் இச்சேவை நடைபெறும். அல்லது ஒருநாள் முன்பேயே விஜயா வங்கி மூலமாக ஊர்ஜிதப்படுத்திக்கொண்டு இவ் ரூ. 2000/- கல்யாணோத்சவ சேவைகள் நடைபெறும். சீட்டு வாங்கிய அன்றே ரூ. 500/- கல்யாணோத்சவங்களில் பங்கேற்கலாம். சாதாரணமாக நாள் ஒன்றிற்கு 50 பெரிய கல்யாணோத்சவங்களும், 100 பிரத்யேக கல்யாணோத்சவங்களும் நடைபெறும்.

7. **பிரம்மோத்சவம் :**

கோயில் அரங்கிற்குள் சுருக்கமாக ஒரு நாளைக்கு நடைபெறும். வேத மந்த்ரகோஷங்கள் முழங்க மலையப்ப சுவாமி (உற்சவமூர்த்தி) தன் துணைப்பெண் தெய்வங்களுடன் கல்யாண மண்டபத்தில் தரிசிக்கப்பட்டு, பின்னர் எல்லா வாகனங்களில் எழுந்தருளி அருள்பாலிப்பார்.

கட்டணம் : ரூ. ~~1000/-~~ 500/-

அனுமதி : 5 நபர்கள்

நேரம் : மாலை 3-00 மணியிலிருந்து 3-30 வரை (எந்த நாளிலும்)

பிரஸாதம் : 6 வடைகள்.

பஹுமானம் : ஓர் உத்தரீயம்.

. **வாகன சேவைகள் :**

இவை இரண்டு வகைகளாகும். 1. தங்க வாகனங்கள். 2. வெள்ளி வாகனங்கள்.

தங்க வாகனங்கள் : பெரிய சேஷம், கருடன், கல்ப விருக்ஷம், ஸர்வ பூபாலம் ஹம்ஸம், சந்திரபிரபை, கஜ மற்றும் அஸ்வம்.

வெள்ளி வாகனங்கள் : சிறிய சேஷம், கருடன், ஹனுமான், சிம்மம் மற்றும் சூர்யப் பிரபை.

கட்டணம் : தங்கவாகனம் : ரூ. 125/- ஒவ்வொன்றுக்கும்; வெள்ளி வாகனம் : ரூ. 100/- ஒவ்வொன்றுக்கும்.

நடைபெறுதல் : நாள்தோறும் மாலை 3-00 லிருந்து 3-30 வரை.

அனுமதி : 3 நபர்கள்.

பிரஸாதம் : ஒரு வடை.

9. **தோலோத்சவம் :** (ஊஞ்சல் சேவை)

அயின மஹாலில் ஸ்ரீதேவி பூதேவி சமேதமாய் மலையப்ப சுவாமி (உற்சவர்) வேதபாராயணம் மற்றும் மங்கள வாத்தியங்கள் உடன் ஒலிக்க அயின மஹாலில் உள்ள ஊஞ்சலில் ஊஞ்சலாடுவார்.

கட்டணம் : ரூ. ~~1500/-~~

அனுமதி : 6 நபர்கள்.

நேரம் : எல்லா நாட்களிலும் மாலை 3-00க்கு

பஹுமானம் : ~~வஸ்த்ரம் மற்றும் தங்க~~ டாலர் ~~(எடை 5 கிராம்)~~

கண்ணாடி அறையினைப் பழுது பார்த்துக் கொண்டிருப்பதால் இச்சேவை 10-5-87 லிருந்து நடைபெறவில்லை.

**குறிப்பு :**

இறைவனுக்கு மேற் கூறிய சேவைகள் நாளும் நடைபெறும். முதல் 5 சேவைகள் மூலவருக்கும், மற்றவை உத்சவர்களுக்கும் நடைபெறும்.

**ஸர்வதரிசனம் :**

இத்தரிசனம் புதன், வியாழன், வெள்ளி ஆகிய கிழமைகள் தவிர்த்து நாள்தோறும் காலை 6 மணியிலிருந்து 11-00 மணி வரையிலும், மதியம் 12 மணியிலிருந்து மாலை 7-00 மணி வரையிலும், காலை 8 லிருந்து 10-30 வரையிலும் அல்லது ஸர்வதரிசன வரிசை முடியும் வரையிலும் நடைபெறும். சாதாரண நாட்களில் 14½ மணி நேரங்கள் யாத்திரிகர்கள் வருகை அதிகம் இருக்கும் நாட்களில் 18 முதல் 20 மணி நேரங்கள் ஸர்வதரிசனம் நடைபெறும்.

## வாராந்திர சேவைகள்

### (செவ்வாய்க் கிழமைகளில்)

**அஷ்டதள பாத பத்மாராதனம் :**

(108 தங்கத்தாமரை மலர்களால் 1 வது அர்ச்சனை)

இச்சேவை காலை 11-15 முதல் 11-30 வரை 15 நிமிடங்கள் நடைபெறும். ~~இச்சேவை தி.தி.தே. பொன் விழாவை முன்னிட்டுப் புகுத்தப்பட்டுள்ளது.~~

கட்டணம் : ரூ. ~~5116~~,

அனுமதி : 5 நபர்கள்

பிரஸாதங்கள்: ~~10~~ பெரிய வடை, ~~10~~ வடைகள்

பஹுமானம் : ~~5 கிராம் எடையுள்ள ஒரு தங்கப்பதக்கம் ஒரு சேஷ வஸ்த்ரம்~~ (புடவை மற்றும் உத்தரீயம்) ஓர் ரவிக்கைத் துண்டு.

குறிப்பு :

இது தவிர, மேற் கூறிய நிகழ்ச்சிகளில் வேறு எந்த வேறுபாடும் கிடையாது.

**(புதன் கிழமைகளில்)**

**ஸகஸ்ரகலஸாபிஷேகம் :**

தங்களுடைய ஆன்மீக மற்றும் லௌகீக நலன்களுக்காக பக்தர்களால் நடத்தப்படும் சிறப்பு ஆர்ஜித நிகழ்ச்சியாம் இது. இது காலை 6-00 மணியிலிருந்து 8-00 மணி வரை நடைபெறும்.

கட்டணம் : ரூ. 3,500/-

அனுமதி : 10 நபர்கள்.

நேரம் : ஒவ்வொரு புதன் கிழமையிலும் காலை காலை 6-00 மணிக்கு.

பிரஸாதம் : 25 லட்டுகள் (பெரியன), 25 வடைகள் 15 அப்பங்கள், 15 தோசைகள், தத்யோதனம், புளியோதரை, பாயஸம், பொங்கல், சர்க்கரைப் பொங்கல் (ஒவ்வொன்றும் 1/8 சோலா எடை).

பஹுமானம் : ஒரு பட்டு உத்தரீயம்.

குறிப்பு :

இரண்டாவது மணிக்குப் பிறகு (2வது நைவேத்தியம்) ஸர்வதரிசனம் காலை 6 மணிக்குப் பதில் காலை 8 மணிக்கு தொடங்கி இரவு 7 மணி வரை தொடரும். மறுபடியும் இரவு 8 மணிக்கு துவங்கி, ஸர்வதரிசன வரிசை முடியும் வரை தொடரும். ஆகையால் ஸர்வதரிசனத்திற்காக சராசரியாக ஒதுக்கப்படும் காலம் 13½ மணி நேரங்களாம். கூட்டம் அதிகமாக இருந்தால், அக்காலம் 18 மணி நேரங்களாக அமையும்.

**(வியாழக்கிழமைகளில்)**

**திருப்பாவாடை சேவை :**

இதுபோது அதிக அளவு அரிசியில் சமைக்கப்பட்ட புளியோதரையினை, மற்றைய இனிப்பு பண்டங்களுடன் இறைவனுக்கு நிவேதிக்கப்படும். இச்சேவை காலை 7 மணியிலிருந்து 8 மணி வரை நடைபெறும்.

கட்டணம் : ரூ. ~~5000~~ 3500/-

அனுமதி : 10 நபர்கள்

நடைபெறுவது: தினந்தோறும் காலை ~~7-00~~ 6-30 மணிக்கு

பிரஸாதங்கள்: 15 லட்டுகள் (பெரியன), 15 வடைகள், 10 ஜிலேபிகள், 10 அப்பங்கள், 15 தோசைகள், ~~1/8 சோலா பாயஸம்~~, 10 தேன்துளைகள், ~~½ சோலா~~ புளியோதரை, பாயஸம், பொங்கல்,

பஹுமானம்: ஓர் உத்தரீயம், ~~5 கிராம் எடையுள்ள ஒரு தங்கப்பதக்கம்.~~

குறிப்பு :

2வது மணி (2வது நிவேதனு). காலை 7 மணியிலிருந்து 8 மணிக்குள் கைங்கர்யம் நடைபெறும். அன்று ஸர்வதரிசனம் காலை 8 மணிக்குத் துவங்கி, மாலை 6 மணி வரை தொடரும். மாலை 6 மணியிலிருந்து இரவு 8 மணி வரை மஹா சுத்தி மற்றும் பூலங்கி சமர்ப்பணை நடைபெறும். மறுபடியும் இரவு 8 மணிக்குத் துவங்கி ஸர்வதரிசனம் தொடங்கி, அது ஸர்வதரிசனம் முடியும் வரை தொடரும். ஸர்வதரிசனத்திற்காக சாதாரண நாட்களில் 12½ மணி நேரங்களும், கூட்டமாக இருக்கும் நாட்களில் 16 மணி நேரங்களும் ஒதுக்கப்படும். அன்று மூலவரின் நேத்ர தரிசனம் மிகச்சிறப்பானதாகும்.

**(வெள்ளிக்கிழமைகளில்)**

அபிஷேகம்: ரூ. 500/- ரூ. 200/- ரூ. 100/- (ஒவ்வொருவருக்கும்) சீட்டு வாங்கிய பக்தர்கள் மூலவருக்கு நடைபெறும் 1½ மணிநேர அபிஷேக சேவைக்கு அனுமதிக்கப்படுவர். இதற்கு 200 சீட்டுகளே விற்கப்படும். அன்று தோமாலா சேவையும், அர்ச்சனையும் காலை 8 மணியிலிருந்து 9 மணி வரை நடைபெற, இதற்கு அமந்த்ரணோத்சவ சீட்டு வாங்கியவர்களும்(ரூ.400/-)அனுமதிக்கப்படுவர். அன்று ஸர்வ தரிசனம் காலை 9.30 மணிக்குத் தொடங்கி இரவு 9 மணி வரை தொடரப் பெற்று, மறுபடியும் இரவு 10 மணிக்குத் துவங்கி, பக்தர்கள் கூட்டம் கலையும் வரை தொடரும். அன்று, ஸர்வ தரிசனத்திற்காகச் சாதாரண வேளைகளில் 13½ மணி நேரங்களும், கூட்டம் அதிகமாக இருந்தால் 16½ மணி நேரங்களும் ஒதுக்கப்படும்.

**பூராபிஷேகம்**

கட்டணம் : ரூ. 500

அனுமதி : 1 நபர்

பிரஸாதம் : 2 வடைகள், 2 லட்டுகள் (சிறியன)

புனுகுக்கிண்ணம்

கட்ட்ணம் : 200

அனுமதி : 1 நபர்

பிரஸாதம் : ஒரு வடை, ஒரு லட்டு (சிறியது)

கஸ்தூரிக் கிண்ணம்

கட்டணம் : ரூ. 100

அனுமதி : 1 நபர்

பிரஸாதம் : ஒரு வடை, ஒரு லட்டு (சிறியது)

சர்க்கார் ஊஞ்சல் சேவை : வாரத்திற்கு ஒரு நாள் வெள்ளிக்கிழமைகளில் கொலுவு மண்டபத்தில் இச்சேவை நடைபெறும். இது சர்க்கார் உத்சவமானாலும், கிருஹஸ்தர்கள் இதில் பங்கேற்கலாம். தன் துணைப் பெண் தெய்வங்களுடன் இறைவன் பூரண அலங்காரத்துடன், நன்கு அலங்கரிக்கப்பட்ட ஊஞ்சலில் எழுந்தருளும் காட்சி பக்தர்களின் கண்களுக்கு ஒரு அரிய விருந்தாகும்.

கட்டணம : ரூ. ~~2000/-~~ 500/-

அனுமதி : 5 நபர்கள்

நேரம் : ~~ஒவ்வொரு வெள்ளிக்கிழ~~மை தோறும் மாலை 5 மணிக்கு.

பஹுமானம் : ஓர் உத்தரீயம், ~~5 கிராம் எடையுள்ள தங்கப் பதக்கம்~~.

## வருடாந்திர சேவைகள்

ஸகஸ்ர தீபாலங்கார சேவை : ஸ்ராவண நட்சத்திர நாளன்று இச் சேவை நடைபெறும். 1008 நெய் விளக்குகள் ஏற்றப்பட்ட ஊஞ்சல் மண்டபத்திற்கு இறைவன் தன் துணைப் பெண் தெய்வங்களுடன் எழுந்தருளுவார்.

கட்டணம் : ரூ. 2000/-

அனுமதி : 6 நபர்கள்.

நேரம் : ஸ்ராவண நட்சத்திரம் மாலை 6 மணிக்கு.

பஹுமானம் : ஓர் உத்தரீயம், ஒரு தங்கப்பதக்கம் (5 கிராம்).

கோயிலாழ்வார் திருமஞ்சனம் : யுகாதி (தெலுங்கு வருடப் பிறப்பு) ஆனிவார ஆஸ்தானம், பிரம்மோத்சவம், வைகுண்ட ஏகாதசி ஆகிய சிறப்பு நாட்களுக்கு முன், கோயில் கருவறை மற்றும் கோயில் அரங்கு யாவும் சுத்தப் படுத்தும் நிகழ்ச்சியே கோயிலாழ்வார் திருமஞ்சனம் எனப் படும். சாதாரணமாக செவ்வாய்க்கிழமைகளில் நடை பெறும்.

கட்டணம் : ரூ. 3000/-

அனுமதி : 10 நபர்கள்.

நேரம் : பகல் 12 மணி

பிரஸாதங்கள் : 20 லட்டுகள் (பெரியன) 20 வடைகள், 10 அப்பங்கள், 10 தோசைகள், தத்யோதனம், புளியோதரை, சர்க்கரைப் பொங்கல், பொங்கல் (ஒவ்வொன்றும் 1/2 சோலா).

பஹுமானம் ஓர் உத்தரீயம்.

பவித்ரோத்சவம் : பவித்ரோத்சவம் என்பது புனிதப் படுத்தும் ஒரு வைதீகச் சடங்கு நிகழ்ச்சியாகும். அதாவது, கோயிலில் நடைபெறும் தினசரி வழிபாடு மற்றும் மற்றைய வைதீக சமய நிகழ்ச்சிகளின்போது ஏதாவது குறைபாடுகள் ஏற்பட்டிருந்தால், அவற்றிற்குப் பரிகாரமாக அல்லது அதிலிருந்து வரும் தீமைகளிலிருந்து காப்பாற்றிக்கொள்ள நடைபெறுவதாகும். இது 3 நாட்களுக்கு ஆகஸ்ட் மாதத்தில் நடைபெறும்.

கட்டணம் : ரூ. 5000/-

அனுமதி : மூன்று நாட்களுக்கு 5 நபர்கள். இது தவிர வெள்ளிக் கிழமையில் தோமால சேவைக்கு 2 நபர்கள், 2வது நாளன்று அர்ச்சனைக்கு 2 நபர்கள், 3வது நாள் ஏகாந்த சேவைக்கு 2 நபர்கள் அனுமதிக்கப் படுவர்.

பிரஸாதங்கள் : 2வது நாள்: 30 தோசைகள், பொங்கல் (½ சோலா), 3வது நாள்: 30 தோசைகள், 6 வடைகள், பொங்கல் (½ சோலா).

பஹுமானம் : ஒரு பட்டு உத்திரீயம், ஒரு பவித்ரம்.

புஷ்பயாகம் : பல்வேறு வகையான மலர்களை இறைவனுக்குச் சமர்ப்பிப்பது ஆகும். பிரம்மோற்சவத்திற்குப் பிறகு நவம்பர் மாதத்தில் ஸ்ராவண நட்சத்திரம் அன்று நடைபெறும்.

கட்டணம் : ரூ. 3500/-

அனுமதி : 5 (இரண்டு முறைகள்)

பஹுமானம் : ஓர் உத்திரீயம், ஒரு ரவிக்கைத் துண்டு, ஒரு தங்கப்பதக்கம் (5 கிராம் எடை).

## கோயில் பிரஸாதங்களின் விற்பனை விவரங்கள்

தி. தி. தேவஸ்தானத்தின் பங்காக வரும் அன்ன பிரஸாதங்களான சித்ரான்னம், இனிப்புப் பொங்கல், பொங்கல், தயிர்சாதம் ஆகியன இலவசமாக பக்தர்களுக்கு விநியோகிக்கப்படுகிறது.

புணியாரங்கள் யாவும் (லட்டு வடை முதலியன) யாத்திரிகர்களுக்கு கோயிலுக்கு வெளியேஉள்ள விற்பனைக் கௌண்ட்டர்களிலும், கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரக் கால் மண்டபத்திலுள்ள (சதஸ் அரங்கு) ஆந்திரா வங்கி கௌண்ட்டரிலும் விற்கப்படுகின்றன.

கோயிலுக்குள் பிரஸாத கௌண்ட்டரில் மிராஸிகளின் பங்கான பிரஸாதங்களும், பணியாரங்களும் விற்கப்படுகின்றன.

மேற்கண்ட இடங்களில் மட்டுமே உண்மையான கோயில் பிரஸாதங்கள் விற்கப்படும்.

தற்போதைய படுல பிரஸாதங்களின் விலைப்பட்டியல் பின் வருமாறு:

லட்டு ரூ. 4 (ஒவ்வொன்றும்)
வடை ரூ. 4 (ஒவ்வொன்றும்)

### பிரஸாதங்கள் (ஸெருபு)

அன்ன பிரஸாதங்கள் :

| | | |
|---|---|---|
| தத்யோதனம் | : | ரூ. 75 |
| புளியோதரை | : | ரூ. 100 |
| பொங்கல் | : | ரூ. 110 |
| சர்க்கரைப் பொங்கல் | : | ரூ. 135 |
| ஸாகராபாத் | : | ரூ. 150 |
| பாயஸம் | : | ரூ. 125 |
| கேஸரிபாத் | : | ரூ. 180 |
| ஸிரா | : | ரூ. 300 |

நைவேத்தியத்திற்குப் பிறகு, கட்டணம் செலுத்திய கிருஹஸ்தர்க்கு ½ சோலா எடையுள்ள பிரஸாதங்கள் வழங்கப்படும்.

படி பிரஸாதங்கள் : (பணியாரங்கள்)

| | | |
|---|---|---|
| லட்டு | : | ரூ. 700 |
| வடை | : | ரூ. 350 |
| போளி | : | ரூ. 350 |
| தோசை | : | ரூ. 300 |
| தேன் துளை | : | ரூ. 300 |
| சுகியம் | : | ரூ. 300 |
| அப்பம் | : | ரூ. 250 |
| ஜிலேபி | : | ரூ. 600 |

படி என்பது 51 எண்ணிக்கைகளைக் கொண்டதாகும்.

கிருஹஸ்தர்க்கு, அவர்கள் நிவேதிக்கும் பணியாரங்களில் (பிரஸாதங்கள்) 30 எண்ணிக்கைகள் வழங்கப்படும் கிருஹஸ்தர்கள் தங்களுடைய பாத்திரங்களில் பிரஸாதங்களை எடுத்துச் செல்ல வேண்டும்.

## திருமலையில் மற்றும் அதனைச் சுற்றிப் பார்க்க வேண்டிய இடங்கள்

**சுவாமி புஷ்கர்ணி :** கோயிலுக்கருகிலுள்ள இப்புஷ்கரிணி மிகவும் புனிதத்தன்மை கொண்டது. கோயிலுக்குள் புகுமுன், யாத்திரிகர்கள் இக்குளத்தில் ஸ்நாநம் செய்தல் வேண்டும்.

**ஆகாச கங்கை :** கோயிலுக்கு வடக்கே 3 கி. மீ தொலைவில் இந்நீர்வீழ்ச்சி உள்ளது.

**பாபவிநாசம் :** கோயிலுக்கு வடக்கே 5 கி. மீ. தொலைவில் உள்ளது.

**வைகுண்ட தீர்த்தம் :** கோயிலுக்கு வடகிழக்குத் திசையில் 3 கி. மீ. தொலைவிலுள்ளது.

**தும்புரு தீர்த்தம் :** கோயிலுக்கு வடக்கே 10 கி. மீ தொலைவிலுள்ளது.

**அதிசய கல் வளைவு :** கோயிலுக்கு வடக்கே 1 கி. மீ தொலைவில் இவ் அதிசய கல் வளைவு உள்ளது.

**லேபாக்ஷி எம்போரியம் :** நியாயமான விலையில் அழகான கைவினைப் பொருட்கள் இங்கு விற்பனைக்குக் கிடைக்கும். இது தி. தி. தே. மத்திய வரவேற்பு அலுவலகத்திற்கு அருகே உள்ளது.

**தி. தி. தே. தோட்டங்கள் :** அரிய மலர் மற்றும் செடி வகைகளைக் கொண்டு அழகான, வேலைப்பாடுகளுடன் கூடிய தோட்டங்களை தி. தி. தே. நிருவகித்து வருகின்றது.

**சதஸ் அரங்கு :** தர்ம பிரசார பரிஷத் ஆதரவின்கீழ் இவ்வரங்கில் சமயச் சொற்பொழிவுகள், ஹரிகதை நிகழ்ச்சிகள், இன்னிசைக் கச்சேரிகள், பஜனைகள் ஆகியன நடைபெறும்.

## ிருப்பதி மற்றும் அதனைச் சுற்றியுள்ள இடங்கள்

திருமலைக் கோயில் போன்று அவ்வளவு பிரசித்தி ல்லாவிட்டாலும், மிகவும் புனிதமானதும் பழமையு ானதுமான சில கோயில்கள் திருப்பதியிலும், அதனைச் ற்றிலும் உள்ளன என்பதை யாத்திரிகர்களுக்கு தி.தி.தே. தரிவிக்க விரும்புகின்றது.

திருப்பதியில் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில், ீ கோதண்டராம சுவாமி கோயில், ஸ்ரீ கபிலேஸ்வர வாமி கோயில் ஆகியன உள்ளன. திருப்பதியிலிருந்து கி. மீ. தொலைவில் உள்ள திருச்சானூரில் ஸ்ரீ பத்மாவதி ாயார் கோவிலுக்குச் சென்றால்தான், திருமலைக் கோயி க்கு செல்லும் வேண்டுதல் பூர்த்தியாகும் என்பர். ங்காபுரத்திலும், நாராயணவனத்திலும் உள்ள ஸ்ரீ கல் ாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில்களும், நாகலா ரத்திலுள்ள ஸ்ரீ வேதநாராயணசுவாமி கோயிலும் மிக ம் பழமைச் சிறப்புடையன.

இக் கோயில்கள் யாவும் திருப்பதிக்கருகே பேருந்து ாக்குவரத்து சாலைகளுடன் இணைக்கப்பட்டுள்ளன. தனி ார் மற்றும் அரசு பேருந்துகள் இத்தடங்களுக்கு அவ்வப் ாது சென்று வருகின்றன. திருப்பதியில் தங்கிக் காண்டே யாத்திரிகர்கள் இவ்இடங்களுக்குச் சென்று ரலாம்.

ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி ஸ்ரீ கோதண்டராமசுவாமி, ீகபிலேஸ்வரசுவாமி, ஸ்ரீநிவாசா மங்காபுரத்திலுள்ள ஸ்ரீ ல்யாண வேங்கடேஸ்வரசுவாமி ஆகிய கோயில்களுக்குச் சன்று வர தி. தி. தேவஸ்தானத்தாரின் ஒப்பந்த ஊர்தி ன்று திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜசுவாமி தர்மசத்திரத் லிருந்து இரண்டு முறை செயற்படும். இதற்கான பணக்கட்டணம் ரூ. 18/- (நபர் ஒருவர்க்கு).

டகை ருந்து: ஆந்திர மாநில போக்குவரத்துக் கழகத்தார் 46 நபர்கள் அமரக்கூடிய "ஒப்பந்த பேருந்து" போக்குவரத்தினைத் திருப்பதி - திருமலைக்கு செயற்படுத்தி வருகின்றது. ஒரு வழிப் பயணக் கட்டணம் ரூ. 300/-

டபாதை: திருமலைக்குச் செல்ல இயற்கை அழகுகளை காணும் வகையில் இரண்டு நடைபாதைகள் உள்ளன. பொதுவாக அதிகமாக பயன்படுத் துவது அலிபிரி (மலை அடிவாரம்) யிலிருந்து. இங்கிருந்து திருமலைக்கு தூரம் 11 கி. மீ. எப் போதாவதுபயன்படுத்துவது, ஸ்ரீவாரி மெட்டி விருந்து திருமலைக்கு (சந்திரகிரி பக்கத்திலி ருந்து). தூரம் 5 கி.மீ. தங்களுடைய வேண்டு தல்களில் ஒன்றாக நடந்து செல்லுவதற்கு இப் பாதைகளைப் பயன்படுத்துகின்றனர்.

## போக்குவரத்து மற்றும் தொடர்பு வசதிகள்

### திருப்பதி

விமானம்: நாள்தோறும் ஹைதராபாத், விஜயவாடா, சென்னை ஆகிய இடங்களுடன் திருப்பதியை இணைக் கும் வகையில் இந்தியன் ஏர்லைன்ஸ் நிறுவனத்தாரின் விமானப் போக்குவரத்து செயல்படுகின்றது.

இரயில் தென்மத்திய இரயில்வேயின்கீழ், திருப்பதியானது ரேணிகுண்ட்டா வழியாக சென்னை; கூடூர் வழியாக விஜயவாடா, ஹைதராபாத்; அரக்கோணம், திருச்சி வழியாக கோயம்புத்தூர், பெங்களூர், கொச்சின் முதலிய இடங்களுடன் இரயில் போக்குவரத்தினால் இணைக்கப்பட்டுள்ளது. திருப்பதி கிழக்கு இரயில் நிலையமே தலைமையானது. திருப்பதியிலிருந்து 10 கி.மீ. தொலைவில் உள்ள ரேணிகுண்ட்டா சந்திப்பே இறங்குவதற்கு மிக உகந்தது.

திருப்பதிக்கு நேரிடையாக கீழ்வரும் இடங்களி லிருந்து இரயில் போக்குவரத்து உள்ளது.

ஹைதராபாத் (ராயலசீமா விரைவு வண்டி)
ஹைதராபாத் (வெங்கடாத்ரி விரைவு வண்டி)
செகெந்திராபாத் (கிருஷ்ணா விரைவு வண்டி)
காகினாடா (திருமலை விரைவு வண்டி)
சென்னை (ஸப்தகிரி விரைவு வண்டி)
திருச்சிராப்பள்ளி (விரைவு வண்டி)
பூரி (விரைவு வண்டி)
தில்லி (நேரிடி பெட்டி)

இந்தியாவில் உள்ள எந்த ஊரிலிருந்தும் திருமலைக்கு நேரிடையாக இரயில் பயணச் சீட்டு வாங்கிக் கொள்ள லாம்.

சாலைப் போக்குவரத்து :

தென் இந்தியாவின் முக்கிய நகரங்கள், மாநகரங்க ளிலிருந்தும் திருப்பதியானது சாலை போக்குவரத்துமுறை யால் இணைக்கப்பட்டுள்ளது.

**704 கி.மீ. ஹைதராபாத்**

(வழி: சூர்யாபேட், விஜயவாடா, குண்ட்டூர், கூடூர், ஸ்ரீ காளஹஸ்தி)

**617 கி. மீ. ஹைதராபாத்**

(வழி; கர்னூல், கடப்பா, பீலேர், பாகரா பேட்டை)

131 கி. மீ. சென்னை

(வழி; ரெட்ஹில்ஸ், பெரியபாளையம், ஊத்துக் கோட்டை, நாகலாபுரம், புத்தூர், ரேணி குண்ட்டா)

147 கி. மீ. சென்னை

(வழி : பூந்தமல்லி, திருவள்ளூர், திருத்தணி, நகரி, புத்தூர்)

170 கி. மீ. சென்னை

(வழி: ரெட்ஹில்ஸ், தடா, காளஹஸ்தி, ரேணி குண்ட்டா)

248 கி. மீ பெங்களூர்

(வழி: கோலார், சித்தூர்)

1281 கி மீ. பம்பாய்

(வழி: பூனா, பெல்காம், தார்வார், ஹரிஹர், டும்பன், பெங்களூர்)

2887 கி மீ. கல்கத்தா

(வழி: கட்டக், விசாகப்பட்டினம், விஜயவாடா)

ஆந்திரமாநிலத்தின் ஏறக்குறைய எல்லா முக்கிய நகரங்களிலிருந்தும், மற்றும் 600 கி.மீ. தொலைவுக்குள் அடங்கும் வண்ணம் சென்னை, கோவை, சேலம், பெங்களூர், சித்துர்க்கா, பாண்டிச்சேரி ஆகிய இடங்களிலிருந்தும் திருப்பதிக்கு நேரடிப் பேருந்து போக்குவரத்து வசதிகள் உள்ளன.

## திருமலை :

சாலை : காலை 3-30 மணி முதல் இரவு 10 மணி வரை சராசரியாக ஒவ்வொரு 5 நிமிடத்திற்கும் திருப்பதிக்கும் திருமலைக்கும் பேருந்துப் போக்குவரத்து உள்ளது. பயணக்கட்டணம் நபர் ஒருவருக்கு ரூ. 4.25. 'க்யூ' முறையில் டிக்கெட் வழங்கப்படும்.

# திருமலை - திருப்பதி

**வேங்கடாத்ரி ஸமம் ஸ்தானம் பிரஹ்மாண்டே நாஸ்திகிஞ்சன**
**வேங்கடேஸ ஸமோ தேவோ நபுதோ நா பவிஷ்யதி.**

வேங்கடாத்ரி (திருமலை) போன்று புனிதமான இடம் இந்த அண்டத்தில் வேறு எங்கும் இல்லை. ஸ்ரீவேங்கடேங்வரரைப் போன்று மகிமை பொருந்திய தெய்வ அவதாரம் முன்போ அல்லது இனி எதிர்காலத்திலோ இருக்கவே முடியாது.

இயற்கைச் சூழற்கிடையில் அழகான குன்றின் மேல் வேங்கடவன் குடிகொண்டிருக்கும் திருமலைக் கோயில் இந்தியாவில் உள்ள பழமையான கோயில்களில் ஒன்றாகும். கலியுகத்தில் ஒருவன் முக்தி அடைய வேண்டுமானால் அவனுக்குள்ள ஒரே அடைக்கலம் இத்திருமலையில் நின்ற வண்ணம் அருள்புரியும் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் ஒருவர்தான் என்று சாஸ்திரங்களும், புராணங்களும், ஸ்தல மகாத்மியங்களும் அறுதியிட்டுக் கூறியிருக்கின்றன.

திருமலை என்பது ஒரு புனிதமான ஸ்தலம் என்பதற்குச் சான்றாக, புகழ்பெற்ற வைணவ ஆசார்யரான ஸ்ரீராமானுஜர், வேங்கடவனின் இருப்பிடமான திருமலையினை மிகவும் உன்னதமாகவும், மகிமை பொருந்தியதாகவும் கருதி, அதனால் அவர்தன் முழங்கால்களைக் கொண்டே திருமலையை அடைந்ததாகக் கூறப்படும் செய்தியே போதும்.

ஆந்திர மாநிலம் சித்தூர் மாவட்டத்தில் திருமலைக் குன்றுகளின் அடிவாரத்தில் திருப்பதி உள்ளது. வைணவ ஆசார்யரான ஸ்ரீராமானுஜருடன் நெருங்கிய தொடர்பு கொண்ட மிகப்பழமையான நகரம் இத்திருப்பதியாகும்.

# தி. தி. தேவஸ்தானம், திருபபதி.

# ஸ்ரீ வேங்கடேஸ்வரர் கோயில், திருமலை.

## கோயில் நேர விவரங்கள்

### சனி, ஞாயிறு, திங்கட்கிழமைகளில்

3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ. 50/- க்குசிறப்பு நுழைவுச்சீட்டுவாங்கியநபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 ,, 3-45 ,, சுத்தி முதலியன

3-45 ,, 4-30 ,, தோமால சேவை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு)

4-30 ,, 4-45 ,, கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 ,, 5-30 ,, முதல் அர்ச்சனை அதாவது ஸகஸ்ரநாம அரச்சனை (ஆர்ஜிதம் ரூ. 100 - நபர் ஒருவர்க்கு)

5-50 ,, 6-00 ,, முதல்மணி, பலி, சாத்துமுறை

6-00 ,, 11-00 ,, ஸர்வ தரிசனம்

11-00 ,, 12-00மதியம் சுத்தி, 2-வதுஅர்ச்சனை (ஏகாந்தம்) 2-வது மணி போன்றன.

12-00 ,, 7-00 இரவு ஸர்வ தரிசனம்

1-00 ,, 5-00 மாலை ஆர்ஜித கல்யாணோத்சவம் பிரம்மோத்சவம், வாகன சேவைகள் ஊஞ்சல் சேவை முதலியன

மதியம்

7-00 ,, 8-00 இரவு சுத்தி, இரவு கைங்கர்யங்கள், (ஏகாந்தம்) இரவு மணி

8-00 ,, 10-00 ,, ஸர்வ தரிசனம்

10-00 ,, 10-30 ,, சுத்தி (ஏகாந்த சேவைக்கு ஏற்பாடுகள்)

10-30 (ஸர்வ தரிசனம் முடிவைப் பொறுத்து) ஏகாந்த சேவை (ஆர்ஜிதம்) ரூ. 50/- நபர் ஒருவருக்கு)

### செவ்வாய்க்கிழமைகளில்

காலை

3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ. 50/- சிறப்பு நுழைவுச் சீட்டு வாங்கிய நபர்கள் அனுமதிக்கப்படுவர்)

3-30 ,, 3-45 ,, சுத்தி முதலியன

3-45 ,, 4-30 ,, தோமால சேவை ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு)

4-30 ,, 4-45 ,, பங்காரு வாகிலியில் கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 ,, 5-30 ,, முதல் அர்ச்சனை, அதாவது ஸகஸ்ரநாமஅர்ச்சனை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு)

5-30 ,, 6-00 ,, முதல்மணி, பலி, சாத்துமுறை

6-00 ,, 11-00 ,, ஸர்வ தரிசனம்

11-00 ,, 11-15 ,, சுத்தி

பகல்

11-15 ,, 11-45 ,, அஷ்டதள பாத பத்மாராதனை சேவை (2-வது அர்ச்சனை தங்க மலர்களுடன்)

11-45 ,, 12-00 பகல் 2 வது மணி

12-00 ,, 7-00 மாலை ஸர்வ தரிசனம்

1-00 ,, 5-00 ,, ஆர்ஜித கல்யாணோத்சவங்கள், பிரம்மோத்சவம், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை போன்றன

இரவு

7-00 ,, 8-00 ,, சுத்தி, இரவு கைங்கர்யங்கள் (ஏகாந்தம்) மற்றும் இரவு மணி

8-00 இரவு 10-00 ,, ஸர்வ தரிசனம்

10-00 ,, 10-30 ,, சுத்தி, ஏகாந்த சேவைக்காக ஏற்பாடுகள்

10-30 இரவு ஏகாந்த சேவை (ரூ. 50/-க்கு சீட்டு வாங்கிய நபர்கள் அனுமதிக்கப்படுவர்)

புதன் கிழமைகளில்

(சிறப்பு சேவை : ஸகஸ்ரகலஸாபிஷேகம்)

காலை

3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ. 50/ க்கு சிறப்பு நுழைவுச் சீட்டு வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப் படுவர்.)

3-30 ,, 3-45 ,, சுத்தி முதலியன.

3-45 ,, 4-30 ,, தோமால சேவை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு)

4-30 ,, 4 45 ,, கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 ,, 5-30 ,, முதல் அர்ச்சனை, ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு)

5-30 ,, 6-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை ஸகஸ்ரகலஸாபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்)

6-00 ,, 8-00 ,, ஆர்ஜித ஸகஸ்ரகலஸாபிஷேகம் சுத்தி, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) மற்றும் மணி முதலியன.

8-00 ,, 7-00 இரவு ஸர்வ தரிசனம்

இரவு

7-00 ,, 8-00 ,, சுத்தி, இரவு கைங்கர்யங்கள் (ஏகாந்தம்) மற்றும் இரவு மணி முதலியன.

8-00 ,, 10-00 ,, ஸர்வ தரிசனம்

10-00 ,, 10-30 ,, சுத்தி (ஏகாந்த சேவைக்கான ஏற்பாடு)

10-30 (ஸர்வ தரிசனம் முடிவைப் பொறுத்து) ஏகாந்த சேவை (ஆர்ஜிதம் ரூ.50/- நபர் ஒருவர்க்கு)

வியாழக்கிழமைகளில்

காலை சிறப்பு சேவைகள்: திருப்பாவாடை, பூலங்கி சேவை

3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ.50/-க்கு சிறப்பு நுழைவுச் சீட்டு வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப் படுவர்)

3-30 ,, 3-45 ,, சுத்தி முதலியன

3-45 ,, 4-30 ,, தோமாலசேவை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு)

4-30 ,, 4-45 ,, (கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம் பங்காரு வாகிலிக்குள்)

4-45 ,, 5-30 ,, முதல் அர்ச்சனை, ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம் ரூ. 100/- நபர் ஒருவர்க்கு)

5-30 ,, 6-00 ,, முதல் மணி, பலி, சாத்துமுறை

6-00 ,, 8-00 ,, சாலிம்பு, 2-வது அர்ச்சனை (ஏகாந்தம்) திருப்பாவடை அலங்காரம், மணி முதலியன

00 ,, 6 மாலை வரை ஸர்வ தரிசனம்

00 ,, 8 இரவுவரை பெரிய சுத்தி, இரவு கைங்கர்யங்கள், பூலங்கி சமர்ப்பணை, இரவு மணி முதலியன.

இரவு

8-00 ,, 10-00 ,, பூலங்கி ஸர்வ தரிசனம்

10-00 ,, 10-30 ,, சுத்தி ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள்

10-30 (ஸர்வ தரிசனம் முடிவைப் பொறுத்து) ஏகாந்த சேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- நபர் ஒருவர்க்கு)

வெள்ளிக் கிழமைகளில்

சிறப்பு சேவை : அபிஷேகம்

காலை

3-00 முதல் 3-30 வரை சுப்ரபாதம் (ரூ. 50/-க்கு சிறப்பு நுழைவுச் சீட்டு வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப் படுவர்)

| | | | |
|---|---|---|---|
| 3-30 | ,, 4-00 | ,, | சாலிம்பு, சுத்தி, நித்ய கட்டளை, கைங்கரியங்கள், காலை முதல் மணிமற்றும்அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள் முதலியன. |
| 4-30 | ,, 6-00 | ,, | அபிஷேகம் |
| 6-00 | ,, 7-00 | ,, | சமர்ப்பணை முதலியன் |
| 7-00 | ,, 8-00 | ,, | தோமாலசேவை, அர்ச்சனை (ஆர்ஜிதம் ரூ. 200) |
| 8-00 | ,, 9-00 | ,, | 2 வது மணி, பலி, சாத்துமுறை போன்றன. |
| 9-00 | ,, 8-30 | இரவு | ஸர்வ தரிசனம் |

மாலை

| | | | |
|---|---|---|---|
| 7-00 | ,, 8-30 | ,, | ஸகஸ்ர தீபாலங்கார சேவை (கொலுவு மண்டபத்தில்) |
| 8-30 | இரவு 9-30 | ,, | சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி போன்றன |
| 9-30 | ,, 10-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 10-00 | ,, 10-30 | ,, | சுத்தி ஏகாந்த சேவைக்கான ஏற்பாடுகள் |

10-30 (ஸர்வ தரிசனம் முடிவைப் பொறுத்து) ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- நபர் ஒருவர்க்கு)

குறிப்பு : மதியம் 1 மணி முதல் மாலை 5 மணி வரை சர்க்கார் மற்றும் ஆர்ஜிதம்; கல்யாணோத்சவம், பிரம்மோத்சவம், ஊஞ்சல் சேவை போன்றன நடைபெறும்.



# இராமாநுசரும் இலக்கியச் சிந்தனையும்



எல்லோருக்கும் 'அரிச்சுவடி' தெரியும்! அரிச்சுவடியின் வரலாறு எத்தனை பேருக்குத் தெரியும்? திருமால் நெறியின் பெரு வளர்ச்சியால் நம்மாழ்வார் காலம் முதல் தமிழ் நெடுங்கணக்கு அரிச்சுவடி என வழங்கப்படுகிறது.

இந்த வித்துக்கு நீர் ஊற்றி வளர்த்தவர் இராமாநுசர். ஒப்பற்ற இலக்கியவாதியே ஒப்பற்ற சமயவாதியாகவும் திகழ்வான் என்பதற்கு இராமாநுசர் ஓர் இந்தியச் சான்று.

திருவாய்மொழி, இராமாயணம் இரண்டிலுமிருந்து கடைந்த வெண்ணெய்தான் 'இராமாநுச தரிசனம்!'

திருமால் நெறியைக் குலசேகர ஆழ்வார் 'தீதில் நன்னெறி' என விளக்கினர். அதை வாழ்க்கை வழக்கமாக்கினர் உடையவர். ஆழ்வார்கள் மொழியில் ஆழங்கால் பட்டவர் இராமாநுசர்.

இந்திய நாகரிகம் நகரத்தில் தொடங்கவில்லை. முல்லை நிலத்தில் தொடங்கியது. முல்லை என்பது வளமான காடு. முல்லையின் ஓவிய வண்ணம் கரும்பச்சை. இதன் நுண் பொருள் 'மாயோன்'. மாயோனே கண்ணன். மாயோன் கோட்பாடு மருத நிலம் வந்தபோது 'பலராமன்' ஆகிக் கலப்பையும் சின்னமாயிற்று. பலராமனும் கண்ணனும் ஒருவரே என்பார் பரிபாடற் பாவலர்.

முல்லை நிலத்தின் அக ஒழுக்கம் கற்பு. தமிழர் போரில் முதல் துறை பசுக் களவு-ஆநிரை கவர்தல். பசுக்கள் முல்லையின் செல்வம். இந்த முதல் நிலைகளின் வளர்ச்சியே தமிழர் நாகரிகம். இந்த நாகரிகத்தின் பரிணாமமே வைஷ்ணவம்.

இயற்கையில் உறையும் இறைவனை—அழகில் விளங்கும் ஆண்டவனை முல்லையில் கண்டவர் முது தமிழர். அதை இலக்கணப்படுத்தியவர் இராமாநுசர்.

ஆளவந்தாரின் மாணவராகத் தம் ஞானயோகத்தைத் தொடங்கிய இராமாநுசர் கல்வியில் காட்டிய ஆர்வம்போல் வேறு எவரிடமும் இருந்ததில்லை.

திருக்கோஷ்டியூர் நம்பியிடம் மந்திரம் கற்க 18 முறை நடந்துதான் அனுமதி பெற்றார். அந்த ரகசியத்தைத்தான் கோபுரம் மேலேறி மக்களுக்குக் கூறினர்.

பிரம்மசூத்திரத்துக்குப் போதாயனர் எழுதிய உரையைக் கற்க 2000 மைல் நடந்து சென்றார்! ஞானத்தைத் தேடிய கால்நடைப் பயணத்தில் இதுவே நீளமான பயணம்.

இராமாநுசர் உயர்ந்த குருமார்களுக்குச் சிறந்த சிஷ்யராகத் திகழ்ந்துள்ளார். அதனால் சிறந்த சிஷ்யர்களுக்கு உயர்ந்த குருவாக உயர முடிந்தது. அவருக்கு அந்தக் காலத்திலேயே பல்லாயிரம் சீடர்களும், 700 துறவிச் சீடர்களும் இருந்தனர். இராமாநுசர் நூற்றந்தாதி அவர் கல்விப் பரப்பை,

"சொல்லார் தமிழொடு மூன்றும்
சுருதிகள் நான்கும் எல்லை
இல்லா அறநெறி யாவும்
தெரிந்தவன்"

என்று மதிப்பிடுகிறது.

இராமாயணம் ஒரு 'பக்தி வெள்ளம். அது குடிகொள்ளும் கோவில் இராமாநுசர்' என்கிறார் திருவரங்கத்து அமுதனர்.

இராமாநுசர் மனம்பட்டதால் தான் திருவாய்மொழி இவ்வளவு பெருமை பெற்றது. ஆழ்வார் பாசுரங்கள் அழியா வரம் பெற்றன. ஆழ்வார் பாடல்களில் ஒரு நயத் தேர்வு நடத்தி 'நித்தியானுசந்தானம்' படைத்து வைணவ வாழ்வை வழிப்படுத்தியவர் அவர்.

புலவர் கு. பச்சைமால்—நாகர்கோயில்.

ஸ்ரீ பாஷ்யம் கண்ட அவரிடம் திருவாய்மொழிக்கு ஒரு பாஷ்யம் வேண்டியபோது, "நானா?...வேதத்துக்கு உரையா? நான் உரை சொன்னால் திருவாய்மொழிக்கு இவ்வளவு அர்த்தம்தான் என்று நினைத்து உலகோர் அதன் அர்த்தப்பரப்பைக் குறைத்து மதிப்பிட்டு விடுவர்" என்று கூறிய பணிவின் புலமையாளர் அவர்.

சிஷ்யன் என்பவன் அவர்போல் கற்க
வேண்டும்
குரு என்பவன் அவர்போல் வாழ
வேண்டும்

ஏட்டில் எழுதுவது மட்டும் இலக்கியமல்ல. அது மண்ணில் நடந்தும் திரியலாம். இராமாநுசர்—மண்ணில் திரிந்த மாபெரும் இலக்கியம்.

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

ஜீவர்களுடைய மனத்தில் மலம், விக்ஷேபம், ஆவரணம் முதலிய மூன்று குற்றங்கள் உண்டு. மலம் என்ற பாவத்தை அழிப்பதற்கே கர்ம காண்டமும், விக்ஷேபம் என்ற சஞ்சலத்தை அழிப்பதற்கே உபாசனையை போதிக்கின்ற வேத உபசாகை காண்டமும் உள்ளன. ஆபரணமென்பது மறைப்பு. இதனை அழிப்பதற்கு ஞான காண்டமே வழியாகும். கர்ம காண்டத்தின் பொருள் முடிவானது அல்ல. ஞான காண்டத்தின் பொருள்தான் பிரம்ம சூத்திரம், உபநிஷத்துகள் பகவத் கீதை முதலியவை உணர்த்தும் முடிவான பொருளாகும்' என்று வாதாடினர். இவ்வாறு 21 நாட்கள் நடந்த வாதத்தில் மண்டல மிசிரரின் கழுத்திலிருந்து மாலே வாடியது. ஆகவே அனைவரும் மண்டன மிசிரர் தோற்றதையும் சங்கரர் வென்றதையும் ஒப்புக் கொண்டனர்.

**நரசிம்மாவதாரம் :**

காபாலிகர் என்ற ஒரு கொள்கையினர் கபாலம் எலும்பு மாலே தரித்து மதுமாமிசம் முதலியவற்றை உக்கிர பைரவர்க்கு முறை செய்து உண்பது வழக்கம். சங்கரர் இவ்வித காபாலிகர் முதலான மதத்தினரைக் கண்டித்து சத்துவ பூஜை செய்ய ஏற்பாடு செய்தார். காபாலிக மதத்தின் தலைவனை கபாலிகன் சங்கரரால் காபாலிக மதம் தோல்வியடைந்ததை எண்ணி அவரை வஞ்சிக்க எண்ணி மாறுவேடத்தில் வந்து சீடனைப் போல் சில நாட்கள் நடித்து வந்தான். பின்னர் ஒரு நாள் சங்கரர் தனியாக இருக்கும் போது "நான் பைரவ பூஜை செய்பவன். ஒரு நாள் பைரவர்' உலகை ஆளும் அரசன் தலையை அல்லது எல்லாமுணர்ந்த ஞானியின் தலையைப் பலியாகத் தந்தால் உன் விருப்பம் பலிக்கும்' என்று கூறினர். அதனல் தங்கள் தலையை எனக்கு தந்தருள வேண்டும்'' என வேண்டினன். அது கேட்ட சங்கரர் 'கானல் நீரை யார் குடித்துச் சென்றலென்ன? எனக்கு யாதொரு குறைவுமில்லை. உன் விருப்பப்படி செய்து கொள்க' என்று கூறி கண் மூடி சமாதியில் அமர்ந்தார். அப்போது சங்கரரின் தலையை வெட்ட எண்ணி கத்தியை ஓங்கினன். அதற்குள் பத்மபாதர் குருவைத் தேடித் தற்செயலாக வந்தபோது இதைக்கண்டு கொதித்தெழுந்து நரசிம்ம மந்திரத்தை உச்சரித்தார். உடனே பத்மபாதர் நரசிம்ம ஆவேசமுண்டவராய், உக்கிர நரசிம்மமூர்த்தியாகத் தோன்றி அந்த காபாலிகனைக் கிழித்தெறிந்தார். பின்னர் சங்கரர் நிஷ்டை கலைந்து நரசிம்மமூர்த்தியைத் துதிக்க அம்மூர்த்தி சாந்தமடைந்தது. பிறகு பத்மபாதர் சினம் தணிந்து தனது குருவை நமஸ்கரித்தார். இச்சரித்திரத்தை பக்தியால் படிப்பவருக்கும் கேட்பவருக்கும் துர்மரணம் ஏற்படாது.

**'சிருங்கேரி' மடம் ஸ்தாபித்தல் :**

ஸ்ரீ சங்கரர் தொட்ட மாத்திரத்திலேயே நன்மையை அளிக்கும் 'துங்க பத்திரா' நதி பாயும் துங்கபத்திரை நதிக்கரையில் உள்ள சிருங்கேரியில் தங்கிப் பெரிய ஆலயமொன்று அமைத்து ஸ்ரீசாராதாம்பிகையை பிரதிஷ்டை செய்து பின் அங்கு ஒரு மடம் அமைத்து 'சாரதா பீடம்' ஸ்தாபித்து அதற்கு சுரேசுவரர் என்ற தனது சீடரைத் தலைவராக்கியருளி அப்பீடத்தின் பரம்பரை ஜகத் குருவாயிருக்கும்படி ஆசீர்வதித்தார்.

**தோடகாசாரியார் :**

ஸ்ரீ சங்கரருக்கு அனந்தகிரி என்ற ஒரு சீடர் இருந்தார். ஸ்ரீ சங்கரர் பக்கத்திலேயே இருந்து அவருக்குப் பணிவிடை செய்வதுதான் அவருக்குத் தெரியும். நிழல் போல ஆசாரியாரைப் பின்பற்றுவார். ஒரு நாள் அனந்தகிரி குருவுடைய காஷாய வஸ்திரத்தை துவைப்பதற்காகச் சென்றிருந்தார். எல்லா சீடர்களும் பாஷ்ய விளக்கம் கேட்க அமர்ந்தனர் ஆசாரியார் கிரியின் வரவை எதிர் பார்த்து இருந்தார். ஆசாரியார் 'சிறிது பொறுங்கள், கிரியும் வந்து விடுவான்' என்று கூறினர். அப்போது பத்மபாதர் 'புத்தியற்றவனும் சாஸ்திரம் கற்க தகுதி அற்றவனுமான அவனுக்காகக் காத்திருந்து என்ன பிரயோசனம்? அதுவும் இந்த சுவரும் ஒன்றுதான்' என்று பொருள் படும்படி ஒரு சுவரைக் சுட்டிக் காண்பித்தார். பத்மபாதருடைய அதிகமான செருக்கை அறுக்க வேண்டும் என்று கிரிக்குப்பதினன்குவித்தைகளையும் மனத்திலேயே அருளினர். உடனே ஆசார்யாள் மேல் தோடக விருத்தத்தில் அமைந்த துதிப்பாடல்களைப் பாடியபடி கிரி வந்தார். இதைக் கண்ட பத்மபாதர் வியப்பெய்தி தம் செருக்கை அகற்றினர். தோடக விருத்தத்தில் பாடல் இயற்றியதால் அவர் 'தோடகாசாரியார்' என்ற பெயர் பெற்றார்.

இவ்வாறு நான்கு வேதங்களோ, முக்தியின் நான்கு பிரிவுகளோ (ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாருப்யம், ஸாயுஜ்யம்) பிரம்ம தேவரின் நான்கு முகங்களோ என்றும் தோன்றும்படி ஸ்ரீ சங்கரருடைய நான்கு சீடர்களான பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர், சுரேஸ்வரர் ஆகியோர் விளங்கினர்கள்.

**தாயாருக்கு வைகுண்ட பதவி அளித்தல்:**

சங்கரர் தமது யோக சக்தியினல் தமது அன்னையாரின் அந்திம காலத்தை உணர்ந்து ஆகாய மார்க்கமாய் காலடி அடைந்து தாயாருடைய பாதங்களை வணங்கினர். அருமை மகனைக் கண்ட தாயார் பெரும் அகமகிழ்வுற்று 'உன்னைப் பார்ப்பதிலும் மேம்பட்ட தொன்றுமில்லை. நீயே என் கருமத்தை முடித்து நற்கதியடைவிக்க வேண்டும்' என்று தெரிவித்தார். இதைக்கேட்ட சங்கரர் தாயாருக்கு ஆத்ம தத்துவத்தை உபதேசித்தார். பிறகு புஜங்கம் என்ற விருத்தத்தினல் பரமசிவனை துதித்

தார். அவரும் மகிழ்ந்து சிவ கணங்களை அனுப்பினார். அவர்களுடன் போக தாயார் மறுத்துவிட்டதில் விஷ்ணுவை துதித்தார். உடனே அந்தத் தாயாரும் விஷ்ணுவை த்யானம் செய்தார். யோகிகள் போலவே தன்னுடைய உடலையும் த்யாகம் செய்தார். பிறகு விஷ்ணுவின் தூதர்கள் அழகிய விமானத்தில் தாயை ஏற்றிக் கொண்டு வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றனர். பிறகு சங்கரர் தன் தாயின் ஸம்ஸ்காரத்தை தானே செய்ய விரும்பினார். ஆனால், உறவினர் துறவியாகிய நீர் அந்திம கர்மம் செய்யலாகாது என்று பழித்து அக்னி கொடுக்க மறுத்துவிட்டனர். இதைப் பொருட்படுத்தாமல் ஐம் பொறிகளை அடக்கிய சங்கரர் தாமே அன்னையாரின் இடக்கையில் தீயுண்டாக்கித் தனியாகவே தகனக்கிரியை முதலான இறுதிக் கடனை முடித்து விட்டு 'இன்று முதல் இந்த இடம் சந்நியாஸிகள் வருவதற்குத் தகுதியற்றதாகுக' என்று கூறிவிட்டுச் சென்றார்.

# புத்தாண்டே வருக!

புத்தாண்டுப் பெண்ணே நீ வா வா
நித்தமின்பம் நிறைத்திடவே வா வா
எத்திக்கும் எழிலோங்க வா வா
முத்தமிழ்நாயகி "விபவ" நீ வாவா

நறுமணமலரே திருமகளே வா வா
அறம்வளர் கலைமகளே வா வா
அருள்தந்து மருள்நீக்க வா வா
கற்பகமே அங்கயற்கண்ணியே வா வா

ஆசுநீக்கி பாசம்தேக்க வா வா
நேசமெங்கும் நிலவச்செய்ய வா வா
தேசமெங்கும் பக்தியோங்க வா வா
வசந்தமே சுகந்தமே "விபவ" வா

பாலோடுதேன் கலந்தசுவை போலவே
பாலாஜிபாமாலை ஏற்றே நீ வா வா
நீலகண்டன் நல்அருளோடு வா வா
நீலமணிவண்ணன் ஆசியோடு வா வா

பரமக்குடி சு. பாலாஜி பாபு.

**காஞ்சி காமகோடி பீடத்தை ஸ்தாபித்தல் :**

ஸ்ரீ சங்கரர் சிதம்பரம் வந்து சிவ கங்கை உண்டாக்கி, காஞ்சிபுரம் வந்து ஸ்ரீ ஏகாம்பர நாதரையும் ஸ்ரீ வரத ராஜ பெருமாளையும் தரிசித்து அங்குள்ள ஸ்ரீ காமாட்சி அம்மனின் உக்கிரக்களையைக்கண்டு ஸ்ரீசக்கரம் ஸ்தாபனம் செய்து உக்கிரனையை மாற்றி சாந்தமுண்டாக்கி அங்கே காமகோடி பீடத்தை ஸ்தாபித்தார். பிறகு கர்னாடக தேசத்திற்குச் சென்று காபாலகர்களை மாற்றி அங்கு வைதீக பூஜை நன்றாக பரவச் செய்தார். பிறகு சங்கரர் துவாரகையை. சேர்ந்து அங்கு சிவ விஷ்ணு அபேதத்தைப் போதித்து அங்கு ஒரு மடத்தை ஸ்தாபித்தார். ஜகந்நாதத்தில் மடம் ஒன்று ஸ்தாபித்தார். இவ்வாறு சாக்தர்கள், பாகவதர்கள், பௌத்தர்கள், காபாலிகர்கள், ஸாங்கியர்கள் பாதஞ்சலர்கள் ஆகிய எல்லோரையும் வென்று தன்னுடைய அத்வைத சித்தாந்தத்தைப் பரப்பி எங்கும் வேத நெறி தழைத்தோங்கச் செய்தார்.

**சங்கரர் ஸர்வஜ்ஞ பீடம் ஏறுதல் :**

பாரத தேசத்தில் சிறந்ததும், வாக் தேவதையாகிய சரஸ்வதி சாந்நித்யம் பெற்றதுமான காஷ்மீர தேசத்தில் நான்கு வாயில்களுள்ள மண்டபமான 'ஸர்வஜ்ஞபீடம்' தேவியின் ஸ்தானமாக விளங்குகிறது. அதன் மீது அமர வேண்டுமானால் சிறந்த அறிஞராக இருக்கவேண்டும். கிழக்கு, மேற்கு, வடக்கு புற வாயில்களை அந்தந்த திசையிலிருந்து வந்த அறிஞர்கள் திறந்து விட்டனர். ஆனால் தெற்கு வாயிலை ஒருவராலும் திறக்க இயலவில்லை. வந்தவர்கள் எல்லாம் அங்கு காவலிருந்த வித்தை தெய்வங்கள் பண்டிதர் வடிவில் கேட்ட கேள்விக்கு விடைகூற இயலாமல் திரும்பி விட்டனர். இதை அறிந்த சங்கரர் தெற்கு வாயில் திறப்பதற்காக காஷ்மீரம் சென்று சாரதாதேவியின் ஆலயத்தை அடைந்தார்கள். அங்கு வாயிலைத்திறக்கும்படி ஒவ்வொரு படியாக ஏறி ஒவ்வொரு தெய்வமும் பண்டிதர் வடிவில் கேட்ட அருமையான கேள்விக்கு உண்மையான விடையை கூறிய வண்ணம் எல்லா படிகளையும் ஏறி பத்மபாதர் கையைப் பிடித்துக் கொண்டு வாயிலின் அருகே சென்றார். அப்போது உள்ளிருந்த சாரதாதேவி அசரீரி வாக்கால் கேட்டகேள்விக்குத் தகுந்த மறுமொழி கூறித் தானே திறந்து அதன் வாயிலிற் புகுந்து, ஸர்வஜ்ஞ பீடமேறி அமர்ந்தார். அப்போது சாராதாதேவியாலும் மற்ற பண்டிதர்களாலும் சர்வ தேவர்களாலும் பூஜிக்கப் பெற்று பூமண்டலாசாரியத் தலைவரென்ற விருதும் பெற்றார். தேவர்கள் கற்பகத்தருவின்மலர்களைப் பொழிந்தனர்.

**ஸௌந்தர்ய லஹரி :**

ஜகன் மாதாவா இருக்கும் அம்பாளைப் பற்றி அனேக கவிகள் ஸ்தோத்திரம் செய்துள்ளனர். அவற்றுள் முக்கியமானதான 'சௌந்தர்ய லஹரி'யை சங்கரர் இயற்றினர். ஸர்வஜ்ஞ பீடத்தில் அமர்ந்த சங்கரர் கைலாஸத்திற்குச் சென்று பார்வதி பரமேஸ்வரனைத் தரிசித்தர். பரமேஸ்வரன் இவருடைய பிரார்த்தனைக்கு இணங்கி தானே, அம்பாளை பற்றிச் செய்திருந்த 'செஸந்தர்யலஹரி'யை எடுத்துச் சங்கரர் கையில் கொடுத்து அநுக்கிரஹித்தார். இதில் மொத்தம் நூறு ஸ்லோகங்கள் உள்ளன.

**சங்கரர் இமயமலையிலுள்ள கேதாரத்தை அடைதல் :**

சங்கர பகவத் பாதாசாரியார் இமய மலையிலுள்ள பத்ரிகாஸிரமம் சென்று தம்மால் இயற்றப்பட்ட வேதாந்த பாஷியங்களை அனைவருக்கும் போதித்துக் கொண்டிருந்தார். அதன் பிறகு சிருங்கேரி மடத்திற்கு சுரேஸ்வராசாரியாரையும், துவாரகை மடத்திற்கு அஸ்தாமலகாசாரியாரையும்,பூரி ஜகன்நாத மடத்திற்கு பத்மபாதாசாரியாரையும், பத்ரிகாஸ்ரம மடத்திற்கு தோடகாசாரியரையும் தலைவர்களாக நியமித்து அத்வைத உண்மையை யாவருக்கும் போதித்து வருமாறு ஏற்பாடு செய்து விட்டு பின் அந்த இமயமலைச் சாரலில் உள்ள கேதார ஸ்தலத்தை யடைந்தார்.

அப்போது சங்கர ஸ்ரீமத் பாதாசாரியார் தாம் அவதரித்த நோக்கம் நிறைவேறி விட்டதால் தாம் கையிலை எழுந்தருள சித்தம் கொண்டார். அப்போது அவருக்கு முப்பத்திரண்டு வயதும் நிரம்பி விட்டது.

**சங்கரர் கையிலைக்கு எழுந்தருளல் :**

இவ்வாறு தெய்வீக செயல்களைச் செய்து முடித்த பரமேஸ்வரன் அவதாரமாகிய 'ஜகத்குரு ஆதி சங்கரரை' கையிலாயத்திற்கு அழைத்துச் செல்ல பிரும்மா, விஷ்ணு, இந்திரன், வாயு, அக்னி முதலிய தேவர்களும், ரிஷிகளும், சித்தர்களும் வந்து தோன்றி சங்கர பகவத் பாதாசாரியரைத் துதித்து புகழ்ந்து கைலாயத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். உடனே சங்கரர் தமது மாணவர்களனைவருக்கும் விடை கொடுத்தருளி, பின்னர் தாம் கையிலாயத்தை அடைய எண்ணியவுடனே, உருத்திர கணங்களால் அலங்கரிக்கப்பட்ட அதி வெண்மையான விருஷபம் எதிரில் வந்து நின்றது. இந்திரன், உபேந்திரன் முதலான சிறந்த தேவர்களால் துதிக்கப்பட்டவராயும், திவ்ய புஷ்பங்களால் அர்ச்சிக்கப்பட்டவராயம், பிரும்மாவினல் தமது திருக்கைகளைத் தாங்கப்பட்டவராயுமிருந்து ஜகத்குரு சங்கர பகவத் பாதாசாரியார் அரியவிருஷபவாகனத்தின்மீது ஆரோகணித்துக் கொண்டு, தமக்குரித்தான குடை, சந்திரன் முதலிய அடையாளங்கள் விளங்க மஹரிஷிகள் முதலானவர்கள் நமஸ்கரிக்க தேவர்கள் மலர் மாரி பொழிய மங்கள வாத்தியங்கள் முழங்க 'ஜய ஜய சங்கர! ஹர ஹர சங்கர' என்ற ஒலி எங்கும் ஒலிக்க திருக்கையிலாயித்திற்கு எழுந்தருளினர்.



**சிவ-பார்வதி ஆலயம்-செங்களூர் (கோவை) எஸ். ஜி. சேஷகிரி-கோவை.**



# கீதை காட்டும் நல்வழி

**மோக்ஷ ஸன்யாஸ யோகம்**
**அத்தியாயம் — 18**
**பகுதி — 19**

'பிருஹத்' என்றால் பெரியது என்று பொருள். பெறற்கரிய பெரிய நிலையை 'பிரம்மம்' என்ற வார்த்தை சுட்டிக் காட்டுகிறது. சிற்றுயிர் அனைத்தும் பரிணாமம் அடைந்து படிப்படியாகப் படைப்பின் உச்சநிலையாகிய மனித நிலையை அடைகின்றன. மனிதராய்ப் பிறந்தவர்கள் படிப்படியாக மன வளர்ச்சி அடைந்து பிரம்ம நிலையை அடைய வேண்டும். அந் நிலையை அடைந்த பின்னர் மறு பிறவி அற்றுப் போகிறது. கடலில் பிறந்த நதி மீண்டும் கடலுடன் ஒன்றிவிடுவது போல, ஜீவாத்மன் பரமாத்மனுடன் லயமாகி விடுகிறான். அந்த நிலையை சித்தி யடைந்தவன் எப்படி அடைகிறான் என்பதைப் பகவான் அடுத்த மூன்று சுலோகங்களில் அழகாகத் தெரிவிக்கிறார்.

புத்யா விசுத்தயா யுக்தோ
த்ருத்யாத்மானம் நியம்ய ச |
சப்தாதீன் விஷயான்ஸ்த் யக்த்வா
ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச || (18-51)

விவிக்தஸேவீ லக்வாசீ
யதவாக்காய மானஸ: |
த்யானயோகபரோ நித்யம்
வைராக்யம் ஸமுபாச்ரித: || (18-52)

அஹங்காரம் பலம் தர்ப்பம்
காமம் க்ரோதம் பரிக்ரஹம் |
விமுச்ய நிர்மம: சாந்தோ
ப்ரஹ்ம பூயாய கல்பதே || (18-53)

'தூய அறிவுடன் கூடியவன் உறுதியுடன் தன்னை அடக்கியும் சப்தம் முதலிய இந்திரிய விஷயங்களைத் துறந்தும், விருப்பு வெறுப்பை விட்டொழித்தும் தனித்திருந்து, உண்டி சுருங்கி, மனம் மொழி மெய்யை அடக்கி, யாண்டும் தியானயோகத்தில் திளைத்திருந்து வைராக்கியம் பூண்டவனாக, அஹங்காரம், ஆணவம், வன்மை, ஆசை, சினம், உடைமை ஆகியவைகளை அகற்றி மமகார மற்று சாந்தமாயிருப்பவன் பிரம்மமாவதற்குத் தகுந்தவன் ஆவான்.'

சுத்தமான தங்கம் என்றால் அதில் வேறு எதுவும் இருக்காது. அதுபோல சுத்தமான காற்று, சுத்தமான தண்ணீர் என்றால் அதைத் தவிர வேறு எதுவும் இருக்காது என்று பொருள். இதே பாங்கில் தூய அறிவு எவ்விதக் கலப்புமற்றது. உள்ளதை உள்ள படிக் காண வல்லது அது. தூய அறிவுடன் கூடியவன் எந்நிலையிலும் மனம் கலங்காது தன்னை அடக்க வல்லவனாகக் காட்சி அளிக்கிறான். இன்ப துன்பம், லாபநஷ்டம், இகழ்ச்சி, புகழ்ச்சி போன்ற எதுவரினும் அவன் அடக்கமாயிருக்கிறான். செவி கண் போன்ற புலன்களின் வழியில் அவன் செல்வதில்லை. இது வேண்டும். அது வேண்டாம் என்ற விருப்பு வெறுப்பு அவனிடம் கிடையாது. எது நேரிடினும், எதுவந்து வாய்த்தாலும் அதை ஈசுவரப்ரஸாதமாக ஏற்றுக் கொள்கிறான். எளிமை, இனிமை, அடக்கம் போன்றவற்றின் இலக்கணமாக அவன் அமைகிறான்.

ஆன்மநாட்டம் ஒருவனிடம் அதிகரிக்கின்ற அளவு ஆரவாரம், கூட்டம் போன்றவற்றில் அவனுக்கு நாட்டம் குறைந்து, தனிமையில் இனிமையைக் காணும் தன்மை அதிகரிக்கும். மற்றவர்கள் சினிமா, நாடகம், கிளப், டீவி என்று பரபரப்புடன் அலைந்து கொண்டிருக்கையில் ஆன்ம நாட்டம் உள்ளவன் ஏகாந்தமாக ஓரிடத்தில் அமர்ந்து இறைவன், இயற்கை மற்றும் படைப்பின் ரகசியங்களைப் பற்றிய சிந்தனையிலாழ்ந்திருப்பான். பிறர் பார்வையில் பைத்தியம் போன்று அவன் காணப்படுவான். ஆனால் உண்மையில் அவன் ஒரு தனிப்பிறவி; தெய்வீகப் பிறவி; அவனை அறிந்து கொள்வது கடினம்.

உண்பதற்காக வாழ்தல், வாழ்வதற்காக உண்பது என்ற இரண்டில் ஆன்ம நாட்டம் உள்ளவன் பிந்திய வகையைச் சார்ந்தவனாவன். உணவிற்காக பெரும் பொழுதையும், தொகையையும் செலவிடமாட்டான். சுருங்கப் பேசுவான். பேசாதிருந்தும் பழகுவான். உணவு உடலைப் பேணுவது போல தனிமை மனதைப் பண்படுத்துகிறது. அளவுடன் உண்பது, அளவுடன் துயில்வது, அன்புடன்

**பேராசிரியர் டி. கே. நாராயணன்**
M.S.c., M.Phil..
**ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.**

பேசுவது போன்றவை அவனது இயல்பான செயல்களாகி விடுகின்றன. தியானம் பயில்வதில் அவனது நாட்டம் செல்கிறது. தியானம் அதிகரிக்குமளவு மனம் அடங்குகிறது என்பது தெரியவரும். மனம் அடங்குமளவு சொல் அடங்கும். செயல் திறன் கூடும். தியான யோகிக்குப் பொருள்களில் பற்று தானாக குறைகிறது.

'நான் நான்' என்பது எவரது பேச்சில் அதிகம் காணப்படுகிறதோ அவர்கள் ஆன்மீகத்திலிருந்து வெகு தொலைவில் இருக்கிறார்கள் என்பது

கிருத்து. 'எல்லார்க்கும் நன்றாம் பணிதல்' என்பது வள்ளுவர் வாக்கு. 'வித்யா ததாதி வினயம்' 'அறிவு அடக்கம் தரும்' என்பது ஆன்றோர் கண்ட முடிவு. 'நான் ஒன்றுமில்லை. எல்லாம் நீயே' என்பதுவே பக்தர்களின் நிலை. தன்னைப் 'பூஜ்யமாக்கி' அதாவது அஹங்காரம், ஆணவம், மமகாரம் போன்ற துர்க்குணங்கள் சிறிதும் அற்றவர்களாக ஆக்கி, 'அனைத்தும் அவனே' என்று இறைவனிடம் எவர்கள் சரணடைகிறார்களோ, அவர்களே பூஜிக்கத் தகுந்த மகான்களாகின்றார்கள். ஆனால் நடைமுறை வாழ்க்கையில் நாம் காண்பது என்ன? நாம் அனவரது வாழ்வின் விழிப்பு நிலையில் ஒவ்வொரு வினாடியிலும் 'யான்' 'எனது' என்ற எண்ணங்களின் தாக்குதல்களுக்கு நாம் உள்ளாகிக் கொண்டிருக்கிறோம். எங்கே அஹங்காரம் உள்ளதோ அங்கே வன்மை, செருக்கு, காமம், கோபம் போன்ற அது தொடர்புள்ள அனைத்து துர்க்குணங்களும் காணப்படும். இவையெல்லாம் எவனிடத்து இல்லையோ அவன் 'சாந்தி' அல்லது அமைதியே வடிவெடுத்தவனாக இருப்பான். அவ்விதம் 'அமைதி' உள்ளவன் பிரம்மத்தை அதாவது பெறற்கரிய பெருநிலையை அடையத் தகுந்தவனாகின்றான். அத்தகைய சான்றோன் எப்படித் திகழ்வான் என்பதற்குரிய விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

ப்ரஹ்மபூத: ப்ரஸன்னாத்மா
ந சோசதி ந காங்க்ஷதி |
ஸம: ஸர்வேஷு பூதேஷு
மத்பக்திம் லபதே பராம் || (18-54)

'பிரம்ம மயமாகித் தெளிந்த மனமுடையவன் துயருறுவதில்லை, அவாவுறுவதில்லை. எல்லா உயிர்களிடத்தும் சமமாயிருப்பவன் என் மீது மேலாம் பக்தியை அடைகிறான்'.

அனைத்தும் பிரம்ம மயம் அதாவது இறைமயம் என்ற ஞானம் எவரிடம் கைவரப் பெறுகிறதோ அவர்கள் எதைக் குறித்தும் ஆத்திரமோ, கவலையோ, அச்சமோ, அதிர்ச்சியோ கொள்ள மாட்டார்கள். ஏன்? முன்னே கத்தியோடு கொலை செய்யக் காத்திருக்கும் கொலைகாரன் கூட பிரம்ம சொரூபம்; அன்புகாட்டும் நண்பன். கொத்த வரும் பாம்பு, சீறிவரும் புலி—இவ்விதம் எதாயிருந்தாலும் அனைத்தும் அவர்களைப் பொறுத்த மட்டில் பிரம்ம சொரூபமே. பிரம்மமன்றி வேறு எதுவும் அவர்கள் கண்களில் படாது. வேண்டும் என்ற ஆசையும் கிடையாது. வரவு, செலவு, லாப நஷ்டம் இன்ப துன்பம் என்ற இரட்டைகளுக்கு அவன் அப்பாற்பட்டவன். அனைத்துயிர்களிடத்தும் அவன் சமநோக்கு படைத்தவன். இத்தகைய உயர் ஞானம் படைத்தவன் என் மீது மேலான பக்தி செலுத்துபவனாகின்றான்' என்று பகவான் கூறுகிறார். இங்கே ஞானமும் பக்தியும் ஒன்றாகி விடுகின்றன.

ஞானம் பெரியதா, பக்தி பெரியதா என்ற ஐயம் பலரது மனத்தில் அவ்வப்பொழுது எழுகிறது. அதற்கான விடையை இந்த சுலோகத்தில் நாம் காண்கிறோம். முதிர்ந்த பக்தியே ஞானம்; முதிர்ந்த ஞானமே பக்தி. இரண்டிற்குமிடையில் எந்தவித வேறுபாடும் கிடையாது. இதுவே 'பரா பக்தி' எனப்படுகிறது. அதுவே சீரிய ஞானியின் நிலை.

சீரிய பக்தன், மற்றும் ஞானி இறுதியில் அடையும் நிலை என்ன என்பதன் விளக்கம் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

*(தொடரும்)*

---

# அன்பே சிவம்

ஒருவன் பாவம் செய்ய அவனுடைய மனம், சந்தர்ப்பம் இரண்டும் காரணமாகின்றன. நாம் பல பாவங்களைச் செய்ய முடியாமல் சந்தர்ப்பமே நம்மைக் கட்டிப் போட்டிருக்கலாம். எனவே ஒரு பாபியை பார்க்கும்போது, "அம்பிகே! இந்தப் பாவத்தை நானும் கூடச் செய்திருக்கலாம். ஆனால் அதற்கு சந்தர்ப்பம் தராமல் நீ கிருபை செய்தாய். அந்தக் கிருபையை இவனுக்கும் செய்யம்மா" என்று பிரார்த்திக்க வேண்டும்.

மனிதனை பாவத்தில் அழுத்துகிற இரண்டு பெரும் சக்திகள், காமமும், குரோதமுமே என்கிறார் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா. அதாவது, நம் கோபத்தினால் நமக்கேதான் தீங்கு செய்து கொள்கிறோம். பெரும்பாலும் நம்முடைய கோபத்தை எதிராளி பொருட்படுத்துவதே கிடையாது. ஆத்திரப்படுவதால், நாமே நம் சரீரம், மனசு இரண்டையும் கெடுத்துக் கொள்வதோடு சரி.

அன்பாக இருப்பதுதான் மனிதனின் ஸ்வபாபமான தர்மம். அதுதான் ஆனந்தமுமாகும். அன்பு நமக்கும் ஆனந்தம். எதிராளிக்கும் ஆனந்தம். அன்பே சிவம் என்பார்கள். நாம் எல்லோரும் அன்பே சிவமாக அமர்ந்திருக்கப் பிரயாசைப்பட வேண்டும்.

— ஸ்ரீ காஞ்சிப்பெரியவர்.

தகவல்: வி. ஸ்ரீதர் — கோயமுத்தூர்.

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்

घोषागणेन वरदध्नि विमथ्यमाने
घोषालयेषु दधिमन्थनतीव्रघोषाः ।
रोषात्कलिं विदधते ककुभश्च कुम्भाः
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ।।

யோஷாகணேந வரதத்நி விமத்யமாநே
கோஷாலயேஷு ததிமந்தந தீவ்ரகோஷா: |
ரோஷாத்கலிம் விததததே ககுபஸ்ச கும்பா:
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— கோஷ ஆலயேஷு = இடைச்சேரிகளிலுள்ள குடிசைகளில்; யோஷா கணேந = (ஆயர்) மங்கையர் கூட்டத்தினுல்; வர தத்நி = உயர்ந்த தயிர்; விமத்யமாநே = கடையப்படும் பொழுது; கும்பா: = தயிர்கடையும் பானைகள்; ததி மந்தந தீவ்ர கோஷா: = தயிர்கடைதலால் உண்டான உரத்த ஒலி உடையவைகளாக; ஸந்தி = இருக்கின்றன. ககுப: ச = திசைகளும்; ரோஷாத் = பொறுக்கமாட்டாமையால் (தாங்களும்); கலிம் = கலகத்தை (எதிரொலியை); விததததே = செய்கின்றன. சேஷ அத்ரி சேகர விபோ = திருமலை முடியில் வாழும் பரிபூர்ணனே! தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலரட்டும்.

கருத்துரை :— இடைச்சேரிகளில் உள்ள இளமங்கையர்கூட எழுந்திருந்து (காலைக் கடன்களை முடித்துக்கொண்டு) தயிர் கடைந்து கொண்டிருக்கின்றனர். அவ்வொலியும் அதனுல் திக்குகளில் உண்டாகும் எதிரொலியும் நின் திருச்செவிகளில் விழவில்லையா? அருளுடன் துயிலெழ வேண்டும்.

குறிப்பு :— 'ஸந்தி' என்ற சொல் தொக்கி நிற்கின்றது. இச்சுலோகத்திற்கு வேறு வகையிலும் சிலர் பொருள் கூறுவர்.

पद्मेशमित्रशतपत्रगतालिवर्गाः
हर्तुं श्रियं कुवलयस्य निजाङ्गलक्ष्म्या ।
भेरीनिनादमिव बिभ्रति तीव्रनादं
शेषाद्रिशेखरविभो तव सुप्रभातम् ।।

பத்மேச மித்ர சதபத்ர கதாலிவர்கா :
ஹர்த்தும் ச்ரியம் குவலயஸ்ய நிஜாங்கலக்ஷ்ம்யா |
பேரீ நிநாத மிவ பிப்ரதி தீவ்ர நாதம்
சேஷாத்ரி சேகர விபோ தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— பத்மேச மித்ர சதபத்ர கத அலி வர்கா: = சூரியனுக்குத் தோழிகளான தாமரைமலர்களை அடைந்துள்ள வண்டினங்கள்; நிஜ அங்க் லக்ஷ்ம்யா = தங்கள் அவயவங்களுடைய (கறு நிறத்தின்) அழகால்; குவலயஸ்ய = கறுநெய்தல் பூக்களுடைய; ச்ரியம் = அழகை (அழகினுல் உண்டான இறுமாப்பை); ஹர்த்தும் = போக்குவதற்காக; தீவ்ர நாதம் = உரத்த ரீங்கார ஒலியாகிற; பேரீ நிநாதம் = முரசு ஒலியை; பிப்ரதி இவ = சுமக்கின்றன (செய்கின்றன)போலும். சேஷ அத்ரி சேகர விபோ = திருமலையிலுறையும் பரிபூர்ணனே; தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— எம்பெருமானே! உன் திரு நிறத்திற்கு வண்டினங்கள் உவமையாவது போல் குவளைமலர்களும் உவமையாகின்றன. இதைப் பொறுது இவ்வண்டினங்கள் குவளை மலர்களின் கறு நிறத்தினும் தம்நிறம் மேன்மையானது என்பதை உலகிற்குப் பறையறைந்து அறிவிப்பனபோல் ரீங்காரம் செய்கின்றன. உன்னைச் சேர்ந்தவர்களுள் எழும் இவ்விரோத உணர்ச்சியை விலக்குவதற்காகவாவது நீ விரைந்து துயிலெழுக.

श्रीमन्नभीष्टवरदाखिललोकबन्धो
श्रीश्रीनिवास जगदेकदयैकसिन्धो ।
श्रीदेवतागृह भुजान्तरदिव्यमूर्ते
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ।।

ஸ்ரீமந் நபீஷ்டவரதாகில லோக பந்தோ
ஸ்ரீஸ்ரீநிவாஸ ஜகதேக தயைக ஸிந்தோ |
ஸ்ரீதேவதா க்ருஹ புஜாந்தர திவ்ய மூர்த்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— ஸ்ரீமந் = திருமகள் நாதனே! அபீஷ்ட வரத = (பக்தர்கள்)விரும்பிய வரங்களைக் கொடுப்பவனே! அகில லோக பந்தோ = எல்லா உலகமக்களுக்கும்(சாஸ்த்ர வரம்பிற்குட்பட்ட) எல்லாவகை உறவும் ஆக இருப்பவனே! ஸ்ரீஸ்ரீநிவாஸ = மேன்மை பொருந்திய ஸ்ரீநிவாஸப் பெருமானே! ஜகத் ஏக தயா ஏக ஸிந்தோ = (எல்லா) உலகங்களிலும் ஒப்பற்று விளங்கும் சீரிய கருணைக் கடலே! ஸ்ரீ தேவதா = திருமகள் என்னும் தெய்வத்

திற்கு; க்ருஹ = இருப்பிடமாயமைந்த; புஜ அந்தர = தோள் நடு(மார்பு)வோடு கூடிய; திவ்ய மூர்த்தே = சிறந்த திருஉருவமுள்ளவனே; ஸ்ரீ வேங்கட அசல பதே = திருவேங்கடமலைக்குத் தலைவனே! தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— அனைவர்க்கும் அனைத்துறவுமாகி நின்று அவர்கள் கோரும் பயன்களை அளித்து நல்வழிப்படுத்தும் கருணைக் கடலே! அருளே உருவெடுத்தவள் போன்ற அலர்மேல்மங்கை இமைப்பொழுதும் பிரியாது உறைகின்ற திருமார்பை உடையவனே! பரமபதத்தினின்றும் இப்பருப்பதத்திற்கு நீ எழுந்தருளிய காரியத்தை நோக்கி விரைவில் துயிலெழுவாயாக.

**श्रीस्वामिपुष्करिणिकाऽऽप्लवनिर्मलाङ्गाः**
**श्रेयोऽर्थिनो हरविरिञ्चसनन्दनाद्याः ।**
**द्वारे वसन्ति वरवेत्रहतोत्तमाङ्गाः**
**श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥**

ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணி காப்லவ நிர்மலாங்கா:
ச்ரேயோऽர்த்திநோ ஹரவிரிஞ்ச ஸநந்தநாத்யா: |
த்வாரே வஸந்தி வர வேத்ர ஹதோத்தமாங்கா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— ஸ்ரீ வேங்கட அசல பதே = திருமலை நாதனே! ஹரவிரிஞ்ச ஸநந்தக ஆத்யா: = அரன் அயன் ஸநந்தநர் முதலியோர்; ச்ரேய: அர்த்திந: = மேன்மைகளை விரும்பி(யவராய்); ஸ்ரீ ஸ்வாமி புஷ்கரிணிகா = சிறந்த ஸ்வாமி புஷ்கரிணியில்; ஆப்லவ = தீர்த்தமாடி(யதால்); நிர்மல அங்கா: = அழுக்கு நீக்கிய (உள்ளும் புறமுமுள்ள அவயவங்கள் உடையவர்களாய்; த்வாரே = (உன் திருக்கோயில்) வாயிலில்; வர வேத்ர ஹத உத்தம அங்கா: = உயர்ந்த பிரம்புகளால் அடிக்கப்பட்ட தலைகள் உடையவர்களாய்; வஸந்தி = 'காத்து' நிற்கின்றனர்; தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— பெரும் பதங்களிலிருக்கும் அயன் அரன் முதலியோரும் உன் முழு அருளை அடைய விரும்பி ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி உள்ளும் புறமும் தூய்மைபெற்று உன் ஸேவைக்காக உன் திருக்கோயில் முன்னிலையில் நிற்கின்றனர். அவர்களுக்கு இரங்கி நீ விரைந்து துயிலெழுவாயாக.

குறிப்பு :— ஸ்வாமி புஷ்கரிணி: கோயிலுக்கு இடதுபுறத்தில் (வடக்கில்) உள்ள திருக்குளம். அதில் நீராடித் தூய்மை பெற்ற பிறகே எத்தகையோரும் கோயிலுக்குள் செல்ல வேண்டும்.

**श्रीशेषशैलगरुडाचलवेङ्कटाद्रि**
**नारायणाद्रिवृषभाद्रिवृषाद्रिमुख्याम् ।**
**आख्यां त्वदीयवसतेरनिशं वदन्ति**
**श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥**

ஸ்ரீ சேஷசைல கருடாசல வேங்கடாத்ரி
நாராயணாத்ரி வ்ருஷபாத்ரி வ்ருஷாத்ரி முக்யாம் |
ஆக்யாம் த்வதீய வஸதேரநிசம் வதந்தி
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— ஸ்ரீ வேங்கட அசல பதே = திருவேங்கட(மலை) நாதனே! (ஹர, விரிஞ்ச ஸநந்தக ஆத்யா:=அரன்...முதலியவர்கள்); ஸ்ரீ சேஷ சைல, கருட அசல, வேங்கட அத்ரி, நாராயண அத்ரி, வ்ருஷப அத்ரி, வ்ருஷ அத்ரி, முக்யாம் = பெருமை வாய்ந்த சேஷ மலை, கருட மலை, வேங்கட மலை, நாராயண மலை, வ்ருஷப மலை வ்ருஷ மலை, முதலிய; த்வதீய வஸதே: ஆக்யாம் = உன் உறைவிடத்தின் பெயர்களை; அநிசம் = எப்பொழுதும்; வதந்தி = சொல்(விமுறையிடு)கின்றனர். தவ ஸுப்ரபாதம்= உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— பரமபதத்தினின்றும் நீ விரும்பி வந்தெழுந்தருளியிருக்கும் இத் திருமலையின் பெருமையை அதற்குள்ள ஏழு பெயர்களாலும் சொல்லிக்கொண்டு, அரன் முதலியவர்கள் உன் திருக்கோயிலின் வாயிலில் நிற்கின்றனர். துயிலெழுந்து அருள்புரிவாயாக.

குறிப்பு :— சுலோகத்தில் கூறியுள்ள ஆறு பெயர்களுடன் ஸிஹ்மாசலம் என்பதையும் சேர்த்து ஏழுமலைகளின் பெயர்களை அறிந்து கொள்க. ஒவ்வொரு சிகரத்திற்கு ஒவ்வொரு பெயர் ஏற்பட்டிருக்கிறது. அனுபவம் வாய்ந்தவர்களைக் கேட்டறிக.

**सेवापराः शिवसुरेशकृशानुधर्म-**
**रक्षोऽम्बुनाथपवमानधनाधिनाथाः ।**
**बद्धाञ्जलिप्रविलसन्निजशीर्षदेशाः**
**श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥**

ஸேவாபரா: சிவ ஸுரேச க்ருசாநு தர்ம
ரக்ஷோऽம்புநாத பவமாந தநாதிநாதா: |
பத்தாஞ்சலி ப்ரவிலஸந் நிஜ சீர்ஷ தேசா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— சிவஸுரேச க்ருசாநு தர்ம ரக்ஷ: அம்புநாத பவமாந தநாதிநாதா: = அரன் இந்திரன் அக்னி இயமன் நிர்ருதி வருணன் வாயு குபேரன் என்ற (திக்பாலகர்கள்) எண்மரும்; பத்த அஞ்ஜலி ப்ரவிலஸந் நிஜ சீர்ஷ தேசா: = கூப்பிய கைகளால் விளங்குகின்ற தங்களுடைய தலைப்பகுதி யுடையவர்களாய்க் கொண்டு; ஸேவாபரா: = தொண்டு (செய்ய) விரும்பி(யவராய்); ஸந்தி = இருக்கின்றனர்; ஸ்ரீ வேங்கடாசலபதே = திருமலை நாதனே! தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை — திக்பாலகர் எண்மரும் உனக்குத் தொண்டு செய்வதற்காகக் கைகளைக் கூப்பித் தொழுது கொண்டு காத்திருக்கின்றனர். துயிலெழுந்து அவரவர் செய்யவேண்டிய பணிகளைக் கட்டளையிட்டருளுக.

(தொடரும்)

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

இவ்வாறு, 'வால்மீகி ஸ்தபஸாம் நிதி:' என்று தொடங்கும் முதல் ச்லோகத்தில், ஆதிகவியான ஸ்ரீமான் வால்மீகி முனிவர் தமது ஸ்ரீராமாயணமென்னும் நூலில் லக்ஷ்மீநாதனை விஷ்ணுவே பரப்ரஹ்மமென்று நிச்சயித்தருளினரென்ற விஷயத்தை இந்நூலாசிரியர் இந்நூலில் ஸ்தாபிக்கப் போவதாகப் பிரதிஜ்ஞை செய்து, அங்ஙனமே இரண்டாம் ச்லோகம் முதலாகப் பதினெட்டாம் ச்லோகம் முடிவாகப் பதினேழு ச்லோகங்களால் பல காரணங்களைக் கூறி ஸ்தாபித்துவிட்டு, இப்பத்தொன்பதாம் ச்லோகத்தில், விஷ்ணுவே பரப்ரஹ்மமென்று நிச்சயிக்க உதவு

*தமிழாக்கம்:*
திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
*சிரோமணி வித்வான்*
*திருப்பதி.*

மவையாய் ஸ்ரீராமாயணத்திலுள்ள காரணங்களில் சில மட்டுமே இந்நூலில் எடுத்துக் கூறப்பட்டன என்று சொல்லி முடித்தருளுகிறார்.

ச்லோகம் 19 :

ஸ்ரீமத் வால்மீகி காவ்யே ச்ருதி சிகரஹிதே ச்ரேயஸாமேகஹேதௌ,
தத்வோபாயார்த்த தத்த்வாவகமந ஸரஸே தத்ரதத்ரோதிதேஷு | ஹேதுஷ்வக்ர்யேஷு பத்மாபரிப்ருட பரம ப்ரஹ்மதா ஸாதநார்த்தாந் காந்சித்
ஸ்தாலீபுலாக க்ரமத இஹ யதாமத்யுபாபீபதாம ||

பதவுரை :

ச்ருதி சிகரஹிதே = வேதாந்தங்களான உபநிஷத்துக்களுக்கு (பொருளை நன்றாக விளக்கும் வாயிலாக) மிகவும் உதவி செய்யுமதும், ச்ரேயஸாம் ஏகஹேதௌ=இவ்வுலக மேலுலகங்களில் அனுபவிக்கும் இன்பங்களுக்கு ஒப்பற்ற காரணமானதும், தத்வ உபாய அர்த்த-தத்த்வ அவகமந-ஸரஸே=பரதத்துவம் உபாயம் புருஷார்த்தம் (=பரம்பொருள் அதனையடையும் நெறி அடைந்து பெறும் பயன்) ஆகியவற்றினுடைய- உண்மை நிலையை அறிவிப்பதனால்- சுவை படைத்ததுமான, ஸ்ரீமத் வால்மீகி காவ்யே=திருவுடைய வால்மீகி முனிவரின் காவியமான ஸ்ரீ ராமாயணத்தில், தத்ர தத்ர உதிதேஷு= ஆங்காங்கே சொல்லப்பட்ட, அக்ர்யேஷு ஹேதுஷு=முக்கியமான காரணங்களில், பத்மா பரிப்ருட, பரம ப்ரஹ்மதா, ஸாதந, அர்த்தாந்=திருவின் மணவாளனான விஷ்ணுவினுடைய, பரப்ரஹ்மமாந்தன்மையை, நிச்சயிப்பதையே பயனாகக் கொண்ட, காந்சித்=சிலவற்றை, யதாமதி= (யாம்) அறிந்தவரையில், ஸ்தாலீபுலாக க்ரமத:=பானையில் (பதம் பார்க்கப்) பருக்கை என்ற முறையில், இஹ=(வால்மீகி திருவுள்ள விளக்கு என்ற) இந்நூலில், உபாபீபதாம= ஆராய்ந்து கூறினோம்.

விசேடவுரை :

'ஸ்ரீமத்' என்பது வால்மீகியின் அடைமொழி. இங்கு ஸ்ரீ என்பது 'ஸா ஹி ஸ்ரீரம்ருதா ஸதாம்' (தைத்-ப்ராஹ் 3-7) = அதுவன்றோ நல்லோர்க்கு அழிவில்லாத செல்வம்- என்று கூறப்பட்ட வைஷ்ணவச் செல்வம். (அதாவது விஷ்ணு பக்தி.) முனிவர்களில் மிகச் சிறந்த வஸிஷ்டரிடமிருந்து உபதேசத்தைப்பெற்று, பின்பு இராம மந்திரத்தில் மன மூன்றப் பெற்றவராய்த் தவம் செய்து வரும் அவருக்குத் தேவர்களின் எண்ணிக்கையால் பல்லாயிரமாண்டுகள் ஒரு கணம்போல் கழிந்தன' என்று தொடங்கி வால்மீகி சரிதத்தில் கூறியதனால் இவர் வைஷ்ணவரென்பதில் விவாதமில்லை.

'வால்மீகி' (=உடலில் நினைவின்றித் 'தவம் செய்யும் இவரைப் புற்று மூடி மறைக்க, பின்பு பல காலங்கழித்து மழை பெய்து புற்று கரைந்ததனால் அதில் நின்றும் தோன்றியவர்) என்ற சொல்லால், தவத்தில் இவருக்குள்ள ஊற்றத்தின் மிகுதி குறிப்பிடப்படுகிறது. இதனால் இவர் மிகமிக நம்பத்தக்கவரென்பது ஸ்பஷ்டாகச் சொல்லப்பட்டது.

அல்லது 'ஸ்ரீமத்' என்பது வால்மீகி காவியத்திற்கே அடைமொழி என்றும் கொள்ளலாம். ஸ்ரீமத்த்வமாவது பெருமையுடைமை. அதாவது பிற நூல்களை விட இதற்குள்ள வேறுபாட்டின் பெருமை: அவையாவன— மிகவும் நம்பத்தக்க வால்மீகி முனிவரால் இயற்றப் பெறுகை, புண்ணியமான புகழ்பெற்ற இராமபிரானையே கதாநாயகனாகக் கொண்டமை, பெரியோர்களால் அத்தாட்சி நூலாகக் கைக்கொள்ளப்படுகை, நூலுடை நாயகனாகிய இராமபிரானாலேயே கொண்டாடப் பெறுகை முதலியவாய், மற்ற மகாபாரதம் முதலான இதிஹாஸங்களைக் காட்டிலும் இதற்குள்ள எல்லையான மகிமையைத் தெரிவிக்குமவையாகையாலே இது தனக்கே உரியவையாய் உலகோர்

## சந்தாதாரர்களுக்கு....

31-5-88—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

59 69 92 100 110 114 188 191 192 194 309 310 316 319 முதல் 323 325 327 329 330 527 657 659 660 669 670 671 674 675 677 679 680 682 685 686 691 692 693 1480 1542 1543 1548 1550 1554 1561 1577 1598 1600 2797 2973 2974 2976 2977 2979 2980 2981 2982 2985 2987 முதல் 2994 2996 3000 3003 முதல் 3032 3034 முதல் 3038 3047.

கௌரவித்தற்குத் தக்க சிறந்த பெருமைகளாகும்.

'காவ்யே'-'உன்னுடைய காவியத்தில் பொய்யான வார்த்தை ஒன்று கூடப் புகப்பெறுது' (பால 2-35) என்னும் பிரமதேவனது வரத்தினால் பொய்யென்கிற பேச்சு சிறிதுமில்லாதது இக்காவியமென்பதை நினைவூட்டவே, வரத்தில் உள்ள 'காவ்யே' என்ற சொல் அப்படியே இடம் பெற்றது. மேலும் 'காவியமென்பது மனைவி போல், நல்ல விஷயத்தை உடனே பின்பற்றும்படி அன்போடு சுவைபட உபதேசிக்குமது' என்பராதலால் அத்தகைய உபதேசத்தை இவ்விராமாயணம் தருமதென்பதை அறிவிக்கைக்காவும் 'காவ்யே' எனப்பட்டதென்றும் கொள்ளலாம்.

'இனிய காவியச்சுவையுடன் கூடிய சாஸ்திரத்தையும் மக்கள் உபயோகிக்கின்றனர். முதலில் தேனைச் சுவைத்துப் பின்பு காரமான மருந்தையும் பருகுகின்றார்களல்லவா?' என்பர் அலங்கார சாஸ்திரமறிந்தவர். 'இருளைப் போக்குதற்கும் நன்மை தீமைகளைப் பகுத்தறிவதற்குமாக கருணையுள்ள பகவான் விளக்கைப் போன்ற ப்ரமாணமாகிற வேத சாஸ்திரத்தை உபதேசிக்கிறான்' (ஸ்ரீர. ஸ்தவ. உத்தர-1) என்கிறபடியே நன்மை தீமைகளின் உண்மை நிலையை நிச்சயித்தலாகிய முக்கியமான பயனை உண்டு பண்ணுவதில் வேதமென்னும் சாஸ்திரத்தைவிட, சுவையுடன் கூடிய காவியமே பேரரசர் பதவியைத் தாங்குமாகையால் எல்லா நூல்களை விட உயர்ந்த இந்த ஸ்ரீராமாயணத்தை சாஸ்திரமென்று வழங்குவது மிகப் பொருந்துமென்று நினைத்தல் தகும்.

'இதிஹாஸ புராணங்களால் வேதத்தை நன்றாக விவரித்தறிய வேண்டும்' (பாரத-ஆதி-1-273)' இதிஹாஸ புராணங்களால் உபநிஷத்துக்களின் பொருள் பிரகாசப்படுத்தப் படுகிறது' ( ? ) 'விதியென்றும் மந்திரமென்றும் அர்த்தவாதமென்றும் பெயர் பெற்றவையான-மூன்று வேதங்களின் மூன்று பிரிவுகளும், ஸ்ம்ருதிகளாலும் இதிஹாஸங்களாலும் புராணங்களாலும் விவரிக்கப்படுகின்றன' ( ? ) என்றிவை முதலிய ப்ரமாணங்களிலுள்ள பிரசித்தியை ஆராய்ந்ததனாலும், இங்குக் காட்டிய மூன்று ப்ரமாணங்களில் 'இதிஹாஸ புராணங்கள்' என்றுள்ள த்வந்த்வஸமாஸம் (உம்மைத் தொகை) பெற்ற தொகைச் சொல்லில், 'அப்யர்ஹிதம் பூர்வம்' (வரருசி வார்த்திகம்) குறைந்த உயிரெழுத்துக்கள் கொண்ட பதத்துக்கு முன்பு, உயர்ந்த பொருளைக் குறிக்கும் சொல் (அதிகவுயிரெழுத்துக்கள் கொண்டதானாலும்) வரக்கடவது - என்னும் வ்யாகரண சாஸ்திரத்தின்படியே 'இதிஹாஸ' என்ற நான்குயிரெழுத்துக்களைக் கொண்ட சொல்லானது மூன்றுயிரெழுத்துக்களைக் கொண்ட 'புராண' என்ற சொல்லைவிட முன்னே இருப்பதைக் கண்டதனாலும் இதிஹாஸம் புராணத்தைக் காட்டிலும் வேதாந்தப் பொருளை விவரிப்பதில் சிறந்ததென்று கருதி 'ச்ருதி சிகர ஹிதே' என்று ஸ்ரீராமாயணமென்னும் இதிஹாஸத்திற்கு அடைமொழி கொடுக்கப்பட்டது. வேதாந்தங்களுக்குச் சிறந்த உதவி செய்யுமது என்பது அதன் பொருள்.

'ச்ரேயஸாம்'-இஹலோக பரலோகங்களில் அனுபவிக்கும் ஸுகங்களுக்கு 'ஏகஹேது:'=முக்கியமான காரணம். அதாவது அந்த ஸுகங்களை அதிகமான ஆயாஸமில்லாமல் உண்டாக்குமது என்றபடி. நிகரில்லாத காரணமென்றும் சொல்லலாம். 'இவ்விராமாயணத்தில் ஒரு பதத்தையேனும் (பக்தியோடு) எவன் படிப்பானோ அவன் மகப்பேறில்லாதவனானால் அஃது உண்டாகப் பெறுவான், பொருளற்றவனானால் பொருளைப் பெறுவான்; மேலும் ஸகல பாபங்களிலிருந்தும் விடுபடப் பெறுவான். இராகவனுடைய சரிதையை பக்தி

யோடு படித்தாலும் பிறர் படிக்கக் கேட்டாலும் அவன் பாபமெல்லாம் ஒழியப் பெற்று நீண்ட ஆயுளைப் பெறுவான். ரகுநாதனுடைய இந்தச் சரித்திரத்தை எவன் பூர்ணமாகப் பாராயணம் செய்வானோ அவன் மரணமடைந்தவுடனே விஷ்ணு லோகத்திற்குச் செல்வது நிச்சயம், இதில் ஐயமில்லை' (ராமா-உத்தர-111-18, 19, 21), 'இவ்விராமாயணம் முழுவதையும் கேட்பவர் திறத்திலும் படிப்பவர் பக்கலிலும் இராமபிரான் எப்போதும் அன்பையுடையவனாகிறான்; அவன் நித்தியனான விஷ்ணு பகவானல்லவா? வால்மீகி முனிவரால் இராமபிரான் விஷயமாக பக்தியுடன் இயற்றப்பட்ட இந்த ஸம்ஹிதையை(=ஏழு காண்டங்களையுடைய வேத ஸம்ஹிதை போன்ற ஏழு காண்டங்கள் அமையப் பெற்ற இந்த இராமாயணத்தை) யாவர் சிலர் தாங்கள் பக்தியோடு எழுதுகிறார்களோ அல்லது பிறரைக் கொண்டு எழுதுவிக்கிறார்களோ அவர்கள் ஸ்வர்க்கத்தில் ஸுகமாக வாழ்வர்கள்' (ராமா-யுத்த 131-114, 120) என்றிவை முதலாகவுள்ள ஸ்ரீராமாயணத்தின் பெருமையை விவரிக்கும் ச்லோகங்களால் ஸ்ரீராமாயணத்தைக் கேட்டல் படித்தல் எழுதுதல் எழுதுவித்தல் முதலிய நற்பணிகளுக்கு, இஹலோக பரலோகங்களில் அனுபவிக்கத் தக்க ஸகல ஸுகங்களையும் அளிக்குமாற்றல் ஸ்பஷ்டமாக கோஷிக்கப்பட்டுள்ளதனால், இராமாயணம் 'ச்ரேயஸாம் ஏகஹேது' என்று கூறியது தகுமென்று கருத்து.

'தத்வ உபாய அர்த்த-தத்வ அவகமந ஸரஸே'—முக்தி பெற விரும்புவோர்க்கு அறிந்தே தீரவேண்டிய பரம்பொருள் அதனையடையத் தக்க நெறி அடைந்து பெறத்தக்க பயன் எனப்படும் மூன்று விஷயங்களை, முதலும் முடிவும் என்று தொடங்கிக் கூறப்படுகின்றவையாய், நூலின் நோக்கத்தை அறியவுதவி செய்யும் அடையாளங்களின் மூலமாகக் கூறுகின்றதாகையால், தத்வம்ஹிதம் புருஷார்த்தம் ஆகியவற்றை அறிவிப்பதில் சுவை படைத்தது (=அதாவது அவற்றை மனைவியின் உபதேசம்போல் சுவைபட அறிவிப்பது) என்றும், அறிவிப்பதனால் சுவை பெற்றது (=அதாவது மிகவுயர்ந்த மூன்று விஷயங்களை அறிவிப்பதன் வாயிலாகச் சுவையையுடையது) என்றும் கருத்துக்கள் கூறத்தகும்.

'தத்ர தத்ர'=அந்தந்த சந்தர்ப்பங்களில் 'உதிதேஷு' கூறப்பட்டவைகளாய், 'அக்ர்யேஷு'=மிக உயர்ந்த, 'ஹேதுஷு'=காரணங்களுக்குள்ளே. அதாவது பிற தேவதைகளிடத்திலும் பொருந்தியிருத்தல் முதலான குற்றங்

(48-ம் பக்கம் பார்க்க)

# ஒரு விண்ணப்பம்

அன்பு பக்தர்களே!

அன்னதானத்தைவிட சிறந்ததும், மேலானதுமான பரிசு வேறு எதுவும் இல்லை. இப்பாரத மண்ணில் தேவையானவர்களுக்கும் ஏழை எளியோர்க்கும் அன்னம் இடுவது என்பது ஒரு திருத்தொண்டு மட்டுமல்ல; வேத காலந்தொட்டே கடைப்பிடிக்கப்பட்டு வந்த ஒரு பழமையான நடைமுறையுமாகும். யார் ஒருவர் உணவு இடுகின்றார்களோ அவர்கள் தேவர்களில் ஒருவராகக் கருதப்படுகிறார்கள்.

1985-இல் திருமலை திருமலை தேவஸ்தானத்தாரால் துவக்கப்பட்ட ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டத்தின் கீழ், திருமலைக்கு வருகை புரியும் யாத்திரிகர்களுக்கு இலவச சத்துணவு வழங்கப்பட்டு வருவது ஒரு முழு வெற்றிப்பணியாக நிகழ்ந்து வருகின்றது. இந்தியாவின் பல பகுதிகளிலிருக்கும் இரக்க மனப்பாண்மைக் கொண்ட நன்கொடையாளர்களிடமிருந்து இத்திட்டத்திற்கு மாபெரும் வரவேற்பு இருந்து வருகின்றது.

இத்திட்டத்தின் கீழ் வழங்கப்படும் உணவின் தரமும் பொது மக்களால் பாராட்டப்பட்டு வருகின்றது. தனித்தன்மை வாய்ந்த இவ் அன்னதான திட்டத்தின் கீழ் திருமலைக்கு வருகை புரியும் எல்லா யாத்திரிகர்களும் பயன் அடைந்து வருகின்றார்கள்.

இத்தகைய புனிதமான நன்கொடைத்திட்டத்தில் சாதாரண பக்தர்களும் பங்கேற்கும் வகையில், தி. தி. தேவஸ்தானம் தான் நிச்சயித்திருந்த தொகை வரம்பினையும் தளர்த்தி ரூ.1000/- அல்லது அது போன்று பன்மடங்கு தொகையினை நன்கொடையாக பக்தர்களும் அளித்திடவும், அதனால் காலம் காலமாக இருந்து வரும் இத் திருத்தொண்டு மேலும் தொடரவும் தி. தி. தேவஸ்தானம் வழி வகுத்துள்ளது. இந்தியாவின் பல்வேறு மூலை முடுக்குகளிலிருந்து வேங்கடவனைக் காண இத்திருமலைக்கு வரும் பல்லாயிரக்கணக்கான ஏழை யாத்திரிகர்களின்பால் உங்கள் கருணை உள்ளம் இரங்கிடுமானால், அதுவே மாற்றியமைக்கப்பட்ட இவ் நித்ய அன்னதான திட்டத்தில் உங்களை பங்கேற்கவும்,இத்திருத்தொண்டு முழு அளவில் வெற்றியடையவும் வழிவகுக்குமென்றே உறுதியுடன் நம்புகிறோம்.

நன்றி

உங்கள் உண்மையான

சி. எச். வெங்கடபதிராஜு

செயலாட்சித் தலைவர், தி.தி.தே. திருப்பதி.

# சித்திரத் திருப்பாவை

ஸ்ரீ ஹரி-சென்னை-71. * சித்திரம் : சசி.

## 27. வென்ற சீர்க் கோவிந்தனே !

"திருவும் எழிலும் நிறைந்த செல்வமே! உன்வீரமும் வீர்யமும் அறியாமல், உன் திருப்பாதக் கமலங்களைப் பணியாமல் எதிர்த்து நின்றவர்களை வெல்லுகின்ற ஆற்றலுள்ள குணக்குன்றே!

உன்னைவிட்டு என்றென்றும் நீங்காமல் இருக்க வேண்டும்; நீயும் நாங்களும் உள்ளம் குளிர்ந்து, கூடியிருந்து களித்திட வேண்டும். நீர் வளமும் நிலவளமும் பொருந்திய இந்நாட்டிலுள்ள நல்லோர், வல்லோர், கொண்டாடும் வண்ணம்—

நெற்றியில் நேர் வகிடின்மீது அணியும் தொய்யகம், நெற்றியின் விளிம்பிலிருந்து செவிவரை அணியும் பூரப்பாளை, நேர்வகிடின் இடது வலது புறங்களில் அணியும் தென்பல்லி, வடபல்லி (சூரிய சந்திர பிறைகள்), கருநாகமென நீண்ட சடையில் திருகி அணியும் திருகு நவரத்ன வில்லை, செவியில் அணியும் பத்ர குண்டலம், ரத்ன தோடுகள், மீனினை ஒத்த மகர குண்டலங்கள், கழுத்தில் அணியும் கண்டிகை, சவடி, முத்தாரம், கொப்புழ்வரை அணியும் வைஜெயந்தி நவரத்ன ஆரம், ஸ்கந்த மாலை, தோள் வளையான பத்ர பூரிமம், மணிக்கட்டுக்கருகில் அணியும் கடகம் (கை வயிர வளைகள்), இடையில் ஒட்டி உறவாடும் முத்து வடங்களுடன் கூடிய மணிமேகலை, திருப்பாத வண்ணச் சீறடிகளில் அணியும் பாடகம், கொஞ்சித் தவழ்ந்திடும் தண்டைகள், நவரத்ன முத்துக்கள் ஒலிக்கும் சிலம்பு நூபுரங்கள், பரியகம், அரியகம், கால் விரல்களில் அணியும் மிஞ்சி பீலி ஆகிய ஆபரணங்களையும், கண்ணையும் கருத்தையும் கவரவல்ல மிக நுண்ணிய வேலைப்பாடமைந்த எழில் வீசும் பட்டாடைகளை உடுத்திக் கொள்வோம் எங்கள் பொன் வண்ண மேனியில்.

கண்ணா! உன் கருணையால் அளிக்கப்பட்ட அமிர்தத்தைவிட மிக உயர்ந்த ஆவின் பாலில் மூழ்கும் வண்ணம் கலந்த சோறு மறையும்படி நெய் பரிமாறி உன் திருநாமத்தையே வாயார மனமார பாடிய வண்ணம் உண்போம். அப்படி உண்ணும் பொழுது அந்த உணவில் கலந்த நறுமண நெய் முழங்கை வழியே வழிந்தோடி வர உண்டு உன் அருளை நினைத்து நினைத்து அக மகிழ்வோம். பசுக்களுக்கெல்லாம் (உயிர்களுக்கெல்லாம்) ஆதி அந்தமில்லா தலைவனே! கோவிந்தனே! நினைவாலும், செயலாலும், உடலாலும் உன்னைத் தொழுது, உன் சன்னதியில் உன் திருப்புகழைப் பாடுவதையே, நாங்கள் பெற விரும்பிய சம்மானம் ஆகும்" என்று பரம்பொருளான பகவானிடம் விண்ணப்பிக்கின்றாள் கோதை.

கூடாரைவெல்லும் சீர்க்கோவிந்தா! உன்தன்னைப்
பாடிப் பறை கொண்டு யாம்பெறு சம்மானம்
நாடு புகழும் பரிசினால் நன்றாக,
சூடகமே, தோள்வளையே, தோடே, செவிப்பூவே,
பாடகமே என்றனைய பல்கலனும் யாம் அணிவோம்,
ஆடை உடுப்போம், அதன்பின்னே பாற்சோறு
மூட நெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்.

'வெண்சங்கு, பறை, திருவிளக்கு, கொடி, விதானம் இவைகளுடன் பல்லாண்டு இசைப்பவரையும் அருள்க என்று பிரார்த்தித்தீர்கள். வேண்டியபடியே அருள்வோம்; இவ்வளவுதானே, வேறு என்ன தேவை உள்ளது?' என வினவினர் பரமன். 'அவையாவும் உன்னைப் போற்றி வணங்கி வழிபடுவதற்காக... இந்நோன்பு நோற்றபின் உன்னிடம் நாங்கள் பெறக்கூடிய சம்மானங்கள் பல உண்டு' என்று நங்கையர் நளினமாய் நவில, 'அஃது என்ன?' என்று பகவான் வினவினர். 'விரத காலங்களில் 'நெய்யுண்ணோம் பாலுண்ணோம் மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்' என்ற நியமங்களை அனுசரித்து வந்தோம் அல்லவா? அதற்குச் சம்மானமாக 'உன்னுடன் சேர்ந்து உண்போம்; நீயும் நப்பின்னையும் உண்பிக்க நெய்யும் பாலும் நிறைந்த பால் அன்னத்தை உண்போம். மையிட்டு எழுதாமல், மலரிட்டு முடியாமல் சலனமற்ற ஸ்திரமான ஒரே மனதுடன் நோன்பு நோற்றதால், அதற்கு மனம் மகிழ்ந்து நீயும் நப்பின்னைப் பிராட்டியும் எங்களுக்கு பலவேறு அணிமணி ஆபரண பட்டாடைகளால் அழகு செய்ய வேண்டும்' என்கிறார்கள் வனிதையர்கள்.

'முழங்கை வழிவார' இவ்வண்ணம் கூறியவர்கள், பிறகு உண்பதைப் பற்றி உணர்த்தாமல் 'கூடியிருந்து குளிர்ந்து' என்கின்றனர். கண்ணனைக் கண்களால் கண்டு கண்டு கடும்பசியும் கடுகித் தீர்ந்ததால் உண்ண வேண்டிய தேவை இல்லை. ஆனால் பிரிந்து உற்ற துயரமெல்லாம் தீர எல்லோரும் கூடிக் களித்திருப்பதே விரும்பும் விருப்பமாகும். 'யாம் பெறு சம்மானம்' என்ன? நீங்காதிருப்போம், உடுப்போம், அணிவோம், குளிர்ந்திருப்போம்' இவையே.

இன்பத்துக்கோ துன்பத்துக்கோ கண்ணனே கரு. பேரருள் பெருந்துன்பம் தொடராமல் — பற்றுமல் இருக்க பகவான் கண்ணனையே தியானிக்க வேண்டும். திருமங்கையாழ்வாரும்,

கதியேல் இல்லை நின்அருள் அல்லது எனக்கு
நிதியே திருநீர்மலை நித்திலக் கொத்தே
பதியே பரவித் தொழும் தொண்டர் தமக்குக்
கதியே உன்னைக் கண்டு கொண்டு உய்ந் தொழிந்தேனே.

என்று போற்றி வணங்குகின்றார்.

# 28. இறைவா ! நீ தாராய்

“திருநிறை கருமாமணியே!இரவு பகலெனப் பாராது அமிர்தம் போன்ற பாலினைப் பொழிய வைக்கும் பசுக்களின் பின்னே செல்வோம்; வளர்ந்தோங்கியக் காட்டினை நோக்கிச் செல்வோம்; புல்லும் நெல்லும் நிறைந்த இடங்களில் பசியாறும் வண்ணம் பசுக்களை மேய்த்துக் கொண்டு நிழலில் வந்தமர்ந்து உடன்கொண்டு வந்த உணவுகளை உண்டு மகிழ்வோம்.

இறைவனை எண்ணக்கூடிய நுண்ணறிவு ஏதும், ஒரு சிறிதும் இல்லாத எங்களுடைய ஆயர் குலத்தில்—உன்னை இப்பிறவியில் பெறுவதற்கு—என்ன புண்ணியம் செய்தோமோ? அப்புண்ணியத்தை உடையவர்களாய்உள்ளோம். தனக்குக்குறையே இல்லாமல் பிறர்க்குக் குறைவு ஒன்று வைக்காமல், குறைவு ஒன்றும் இல்லாத கோமகனே!

உனக்கும் எங்களுக்கும் உள்ள உறவு, இப்பிறப்பில் மட்டும் அல்லாமல் எப்பிறப்பிலும் அழிக்கவோ, ஒழிக்கவோ இயலாது. உன் தன்னோடு உள்ள ‘அந்த உறவு’ என்றென்றும் நிலைத்து நிற்கும்; காலத்தால் அழியாது.

உலக அறிவு ஒன்றும் அறியாத சின்னஞ்சிறு பிள்ளைகள் நாங்கள். உன் மேல் வைத்துள்ள ஆழ்ந்த அன்பினால் — பக்தியினால்-பற்றினால் - உன்னைச் சிறிய பெயராலே - சிற்றறிவாலே ‘கண்ணா’ என்றும், ‘பரமனே’ என்றும், ‘உத்தமனே’ என்றும், ‘மாயனே’ என்றும், ‘நாராயணனே’ என்றும், ‘வைகுந்தனே’ என்றும், ‘பூவண்ணா’ என்றும், அழைக்கின்றோம். சிற்றறிவு கொண்டு அவ்விதம் அழைப்பதற்காக நீ அருள் கொண்டு கோபியாதிருக்க வேண்டும்.

எம் தலைவனே! எங்களுக்கு என்ன வேண்டுமோ அவற்றை நீ தான் கருணை கொண்டு தந்தருள வேண்டும்’ என்று மணிவண்ணனை முகில்வண்ணனிடம் வேண்டுகிறாள் கோதை.

கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்து உண்போம்!
அறிவொன்றும் இல்லாத ஆய்க்குலத்து உன்தன்னைப்
பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்;
குறைவொன்றும் இல்லாத கோவிந்தா! உன்தன்னோடு
உறவேல் நமக்கு இங்கு ஒழிக்க ஒழியாது!
அறியாதபிள்ளை களோம் அன்பினால் உன்தன்னைச்
சிறுபேர் அழைத்தனவும் சீறி அருளாதே,
இறைவா! நீ தாராய் பறையேலோ ரெம்பாவாய்.

நோன்பை முன்னிட்டு சங்கு, தீபம் முதலியவற்றையும், நோன்பை முடித்தபின் அலங்கரித்து ஒப்பனை செய்ய ஆடை ஆபரணங்களையும் உண்ணப் பாற்சோறும் விரும்பினர். அவர்களை நோக்கிய பூவண்ணன், ‘நங்கையர்களே! நீங்கள் பேருவகையுற்று என்னிடம் அவற்றைப் பெறுவதற்கு நீங்கள் இதுவரை அனுஷ்டித்த ‘கைங்கர்யம்’ ஏதேனும் உண்டோ’ என்று வினவினான்.

‘எங்களுடைய கைங்கர்யம்’ என்பதைவிட உபாய சூந்யதைதான் உண்டு’ என்கிறார்கள். அஃதாவது, யாதொரு கைங்கர்யமும் இல்லாததை தெரிவித்த போதிலும், ‘நீயே’ கைங்கர்யமாக வேணும்; அருள் கூர்ந்து எங்களது சீர்பெற்ற சிறப்புப் பணியை (நோன்பை) நிறைவேற்ற வேணும்’ என்று கண்ணன் சன்னிதானத்தில் விண்ணப்பஞ் செய்வதே இப்பாசுரமாகும்.

‘கறவைகள் பின் சென்று... உண்போம்’ ‘ஆதவன் வருகையால், ‘கொக்ரக்கோ’ என்று சேவல்கள் கூவ, ‘குக்கூ கூ’வென்று குயில்கள் கூவ, மாடுகளை மேய்த்துவர-பசுக்களுடன் காட்டிற்குச் செல்கின்ற எங்களுக்கு எத்தகைய ஸாதன ஸம்பத்து வாய்க்கப் போகின்றது? காடுதான் எங்களது திருப்பதி; எவ்வித பூஜையுமின்றி வயிறார உண்போம், அதனால் போதிய உலக ஞானம் இல்லை,’ என்பதை வெளிப்படையாக விளக்குகிறாள்.

திருப்பாற்கடலை விட்டு, நின் திருப்பாதங்கள் ஆயர்குலத்தில் புல்லும் கல்லும் நிறைந்த கானகத்தில் எழுந்தருளி, இங்குள்ளோர்களின் அறியாமையைப் போக்கி, அஞ்ஞானத்தை அகற்றி, அதர்மத்தை அழித்து நலமும் வளமும், சீர்சிறப்புச் செல்வமும் அளித்த உனக்கு ஒரு குறையும் உண்டோ? இவ்வுயிர்களைக் காப்பாற்ற வரும்பொழுது அவ்வுயிர்களின் உயிராகத் திருவுருத்தாங்கி வந்தால்தான் அவர்கள் உன்னை நம்பி நின் ஆற்றலை, நின் திருப்புகழைப் போற்றுவர் அன்றோ!

பகவானை உபாயமாகப் பற்றும் ‘பக்தனுக்கு’ உரிய ஆறு அங்கங்களை இப்பாசுரம் உணர்த்துகிறது. 1. ஸத்கர்மம்,குரு குலவாஸ, சாதனங்கள் இல்லையென்பது, 2. வித்யாகர்வம் - ஜாதி கர்வம் தவிர்த்திருப்பது, 3. பகவானின் குறையொன்றும் இல்லாத குண சம்பூர்ணத்தை அனுசந்திப்பது, 4. அழிக்க முடியாத பகவானின் உறவை உணர்ந்து இருப்பது, 5. குற்ற மன்னிப்பை இறைஞ்சுவது, 6. ஸாக்ஷாத் உபாயமான பகவானிடத்தில் உபேயத்தை அபேக்ஷிப்பது ஆகியவையாகும். சிறுபேராலும் சிறப்புப் பேராலும் போற்றினாலும் காணவல்லவர் ஆரோ - என்று திருமழிசை ஆழ்வார் போற்றுகிறார் வியந்து.

ஆதியான வானவர்க்கும் அண்டமாய அப்புறத்து
ஆதியான வானவர்க்கும் ஆதியான ஆதிநீ
ஆதியான வானவாணர் அந்தகாலம் நீஉரைத்தி
ஆதியான காலம்நின்னை யாவர்காண வல்லரே!

# சித்திரை பிறந்ததம்மா

திரு. வெ. சுந்தரம் — பரமக்குடி.

எடுப்பு :—

சித்திரை பிறந்ததம்மா—நல்ல
முத்திரை பதித்ததம்மா
பத்தரை மாற்றுப்பசும்
பொன்னைப் போலவே — (சித்திரை)

தொடுப்பு :—

உழைப்பும் உயர்ந்தது — நல்
உள்ளம் நிறைந்தது
செழிப்பும் மிகுந்ததம்மா — வாழ்வில்
செம்மையும் சேர்ந்ததம்மா. (சித்திரை)

முடிப்பு :—

தூய்மை துலங்குது — உயர்
வாய்மை நிலைக்குது
பொய்மை அழிந்ததம்மா — நல்ல
புதுமைகள் பிறந்ததம்மா. (சித்திரை)

கல்வியும் கலைகளும் — எழில்
சொல்லரும் தொழில்களும்
வல்லமை கொண்டதம்மா — நாட்டின்
தொல்லைகள் தீர்ந்ததம்மா (சித்திரை)

சோதனை வந்தாலும் — அதில்
சாதனை கொண்டதால்
சத்தியம் நிலைத்ததம்மா — நாட்டில்
சமுத்துவம் செறிந்ததம்மா — (சித்திரை)

தித்திக்கும் தமிழாலே — இசை
எத்திக்கும் புகழ்பாட
தத்துவம் தந்ததம்மா — பக்தி
நித்தமும் வளருதம்மா — (சித்திரை)

வேலவனின் மாமனவன்—திரு
மாலவனின் மார்பிலுறை
மகாலெக்ஷ்மி அருள்வாளம்மா—தனம்
மாண்புற நிறைப்பாளம்மா — (சித்திரை)

நல்லெண்ணம் நற்றொண்டு — உயிர்
கொல்லாமை கொண்டஅன்பு
எல்லோரும் ஏற்றாரம்மா—அல்லல்
இல்லாமல் வாழ்வாரம்மா. (சித்திரை)

அனுப்பியவர் : வி. ஸ்ரீதர் — கோவை.

களுக்கு அப்பாற்பட்டவைகளாகை யாலும், வேறு வழியேதுமின்றி விஷ்ணுவினிடமே பொருந்துவதனு லும் மிகவுயர்ந்த காரணங்களாகின் றன இவைகள் என்றவாறு.

'பத்மாபரிப்ருட பரமப்ரஹ்மதா ஸாதந அர்த்தாந் காந்சித்'—'உனக்கு பூமிப் பிராட்டியும் ஸ்ரீ மஹாலக்ஷ்மி யும் தேவிமார்' (உத்தர நாராயணம் 6) என்ற ச்ருதியிலுள்ள பிரசித்தி யினுல், லக்ஷ்மீபதியான விஷ்ணுவே பரப்ரஹ்மமென்று ஸாதிப்பதைப் பயனுகக் கொண்ட சில காரணங் களை-என்றபடி.

'ஸ்தாலீ புலாக க்ரமத:'—'சமைக் கும் பானை மிகப் பெரிதாயிருந்தாலும் அது தன்னில் வேகும் சோற்றுத்திர ளில் இரண்டு அல்லது மூன்று பருக் கைகளை மட்டும் நோக்கினுலே வெந்ததா இல்லையா என்னும் நிச் சயம் உண்டாகும்' என்ற உலக நடை முறையிலே என்றபடி. 'பொன்னின் மாற்றை அறிவதற்கு (ஒரு மூலையில் மட்டும் உரைத்துப் பார்த்தாலே போதுமாகையாலே) பொற்கட்டி முழுதும் உரைத்துப் பார்ப்பதில்லை யன்றோ? ( ? ) என்றும் ஆசார்யர் அருளிச் செய்துள்ளார்கள். (அது போல், பல காரணங்களில் சில வற்றை மட்டும் எடுத்துக் கூறினுல், அதுவே விஷ்ணுபரம்பொருளென்ற றிவதற்குப்போதுமானதுஎன்றபடி.)

'யதாமதி' - அறிந்தவரையில் என்ற படி. 'சொல்லுகின்றவர் தமது அறி வின் குறைவினுல் சிறிதே சொல்லி மீள்கின்ருர்களே யொழிய, கோவிந் தனுடைய குணங்களில் குறைவினு லல்ல' ( ? ) என்றபடியே 'அறிந்த வரையில்' எனப்பட்டது. விஷ்ணு வின் பரப்ரஹ்மத்துவத்தை நிலை நாட்டுமவையாக ஸ்ரீராமாயணத் தின்கண் அறியப்பட்ட காரணங்கள் பல விளங்கிய போதிலும் சிலவற்றை மட்டுமே கூறி நூலைத் தலைக்கட்டு வதற்கு, எமது சோம்பல் முதலி யனவே காரணமென்று கருத்து.

வால்மீகி திருவுள்ள விளக்கு என் னும் இந்த நூல் வேதத்தை அத் தாட்சியாக இசைந்த மக்களனைவரும் விரும்பும்படியான தகுதி பெற்ற தென்பதை விளக்குவதற்காக, நூலா சிரியரைப்பற்றிய சில தன்மைகளைக் காட்டுகிருர் 'இத்தம்'என்று தொடங் கும் இறுதியான ச்லோகத்தினுல். அதனை அடுத்த இதழில் பார்ப்போம்.

(தொடரும்)

Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba rao, M.A. and Printed at T. T. D. Press by M. Vijayakumar Reddy Manager, T. T. D. Press, Tirupati-51750.1

## வருகை புரியுங்கள்!



# ஸ்ரீ வேத நாராயணசுவாமி திருக்கோயில், நாகலாபுரம்.

# வருடாந்திர பிரம்மோற்சவம்

| தேதி | நாட்கள் | காலை நிகழ்ச்சிகள் | இரவு நிகழ்ச்சிகள் |
|---|---|---|---|
| 29-4-98 | வெள்ளி | —— | அங்குரார்ப்பணம் |
| 30-4-88 | சனி | துவஜாரோஹணம் | பெரிய சேஷ வாகனம் |
| 1-5-88 | ஞாயிறு | சிறிய சேஷவாகனம் | அம்ஸவாகனம் |
| 2-5-88 | திங்கள் | சிம்ஹ வாகனம் | முத்துப்பந்தல் |
| 3-5-88 | செவ்வாய் | கல்பவிருக்ஷ வாகனம் | ஸர்வ பூபால வாகனம் |
| 4-5-88 | புதன் | பல்லக்கில் மோகினி அவதாரம் | கருட வாகனம் |
| 5-5-88 | வியாழன் | அனுமத்வாகனம் (மாலை வசந்தோற்சவம்) | கஜ வாகனம் |
| 6-5-88 | வெள்ளி | சூரியப் பிரபை | சந்திரப்பிரபை |
| 7-5-88 | சனி | ரதோற்சவம் | ஹஸ்வவாகனம் |
| 8-5-88 | ஞாயிறு | பல்லக்கு உற்சவம் அவப்பிரதோற்சவம் | துவஹாவரோஹணம் |